ॐ

ஸ்ரீ குருப்யோ நம:



# तत्त्वबोधः

ஸ்ரீசங்கராச்சார்யர் எழுதி அருளிய

# தத்வபோதம்

## வேதாந்தத்தின் ஆரம்ப பாடம்

மதுவர்ஷினி விளக்கவுரை
ஸ்ரீஸ்வாமி பரமஹம்ஸானந்த ஸரஸ்வதி





***ஸரஸ்வதி நமஸ்துப்யம் வரதே காமரூபினீம் /***
***வித்யாரம்பம் கரிஷ்யாமி ஸித்திர் பவது மே ஸதா //***

*ஆசைப்பட்டதை வரமாக அருளுகின்ற காமவடிவான ஸரஸ்வதியே உனக்கு நமஸ்காரங்களாகட்டும். நான் இந்த வித்யாவை ஆரம்பம் செய்கின்றேன். எனக்கு எப்போதும் இந்த வித்யா (உன் அருளாலே) ஸித்தியாகட்டும்.*

***********



## ஸ்ரீ குரு வந்தனம் - श्री गुरु वन्दनम्

**गुरुर्ब्रह्मा गुरुर्विष्णुः गुरुर्देवोमहेश्वरः ।**
**गुरुः साक्षात्परंब्रह्म तस्मै श्रीगुरवे नमः ॥**

***குருர் ப்ரஹ்மா குருர்விஷ்ணு: குருர் தேவோ மஹேச்வர: ।***
***குரு: ஸாக்ஷாத் பரம் ப்ரஹ்ம தஸ்மை ஸ்ரீ குரவே நம: ॥***

*குருவே ப்ரஹ்மா; குருவே விஷ்ணு; குருவே மஹேச்வர தேவர். குருவே நேரடியாக நம் முன் நிற்கின்ற மேலான ப்ரஹ்ம தத்துவம். அந்த குருவிற்கு நமஸ்காரங்கள் ஆகட்டும்.*

**नारायणं पद्मभुवं वसिष्ठं शक्तिञ्च तत्पुत्र पराशरञ्च ।**
**व्यासं शुकं गौडपदं महान्तं गोविन्दयोगीन्द्रमथास्यशिष्यम् ॥**
**श्रीशंकराचार्यमथास्य पद्मपादञ्च हस्तामलकञ्चशिष्यम् ।**
**तं तोटकंवार्तिककारमन्यानस्मद्गुरून् संततमानतोस्मि ॥**

***நாராயணம் பத்மபுவம் வசிஷ்டம் சக்திஞ்ச தத்புத்ர பராசரஞ்ச ।***
***வ்யாஸம் சுகம்கௌடபதம் மஹாந்தம் கோவிந்தயோகீந்த்ர மதாஸ்யசிஷ்யம் ॥ ஸ்ரீசங்கராசார்யமதாஸ்ய பத்மபாதஞ்ச ஹஸ்தாமலகஞ்சசிஷ்யம் । தம் தோடகம் வார்த்திககாரமன்யாந் அஸ்மத்குரூந் ஸந்ததமானதோஸ்மி ॥***

*நாராயணர், அவருடைய நாபிகமலத்திலிருந்து தோன்றிய ப்ரஹ்மா, அவருடைய மானஸ புத்திரராகிய வசிஷ்டர், அவருடைய புத்திரராகிய சக்தி, அவருடைய புத்திரராகிய பராசரர், அவருடைய புத்திரராகிய வியாஸர், அவருடைய புத்திரராகிய சுகர், (இதுவரை தந்தையே குரு. இதற்கு மேல் குரு-சிஷ்யர்கள் வேறு வேறு.) சுகருடைய சிஷ்யராகிய பூஜைக்குரிய கௌடபாதர், அவருடைய சிஷ்யராகிய யோகீந்திரராகிய கோவிந்த பகவத்பாதர், அவருடைய சிஷ்யராகிய ஸ்ரீசங்கராச்சார்யார், அவருடைய சிஷ்யர்களாகிய பத்மபாதர், ஹஸ்தாமலகர், தோடகர், வார்த்திககாரரர் என்கின்ற சுரேச்வராசார்யார், மற்றும் அவர்களைத் தொடர்ந்து என்னுடைய குரு வரை வந்த மற்ற குருமார்களையும் எப்பொழுதும் நமஸ்கரித்தவனாக இருக்கின்றேன்.*

**श्रुतिस्मृतिपुराणानामालयं करुणालयम् ।**
**नमामि भगवत्पादं शंकरं लोकशंकरम् ।।**

***ச்ருதி ஸ்ம்ருதி புராணானாம் ஆலயம் கருணாலயம் ।***
***நமாமி பகவத்பாதம் சங்கரம் லோகசங்கரம் ।।***

*ச்ருதி, ஸ்ம்ருதி மற்றும் புராணங்களின் உறைவிடமாகவும், கருணை உறைகின்றவராகவும், லோகத்திற்கு நன்மை பயப்பவருமாகிய பகவான் ஸ்ரீசங்கரரின் பாதங்களை நமஸ்கரிக்கின்றேன்.*

**शंकरं शंकराचार्यं केशवं बादरायणम् ।**
**सूत्रभाष्यकृतौ वन्दे भगवन्तौ पुनः पुनः ।।**

***சங்கரம் சங்கராசார்யம் கேசவம் பாதராயணம் ।***
***ஸூத்ரபாஷ்ய க்ருதௌ வந்தே பகவந்தௌ புந: புந: ।।***

*ஸாக்ஷாத் கேசவராகிய ப்ரஹ்மஸூத்ரம் செய்த வியாஸ பகவானையும், ஸாக்ஷாத் சங்கரராகிய ப்ரஹ்மஸூத்ரத்திற்கு பாஷ்யம் செய்த ஸ்ரீசங்கர பகவானையும் மறுபடியும் மறுபடியும் நான் வணங்குகின்றேன்.*

**ईश्वरो गुरुरात्मेति मूर्तिभेदविभागिने ।**
**व्योमवत्व्याप्त देहाय दक्षिणामूर्तये नमः ।।**

***ஈச்வரோ குருராத்மேதி மூர்த்திபேத விபாகினே ।***
***வ்யோமவத்வ்யாப்த தேஹாய தக்ஷிணாமூர்த்தயே நம: ।।***

*ஈச்வரனாக, குருவாக, ஆத்மாவாக உடலால் பிரிந்திருப்பவரே, ஆகாசம் போன்று எங்கும் விரவியிருக்கின்ற உடலை உடையவரே தக்ஷிணாமூர்த்தியே உங்களுக்கு நமஸ்காரங்களாகட்டும்.*

**सदाशिवसमारंभां शंकराचार्य मध्यमां ।**
**अस्मदाचार्य पर्यन्तां वन्दे गुरुपरम्पराम् ।।**

***ஸதாசிவ ஸமாரம்பாம் சங்கராசார்ய மத்யமாம் ।***
***அஸ்மதாசார்ய பர்யந்தாம் வந்தே குருபரம்பராம் ।।***

*ஸதாசிவரிடமிருந்து ஆரம்பித்து, சங்கராச்சார்யரை மத்தியில்கொண்டு, என்னுடைய ஆச்சார்யர் வரையுள்ள குருபரம்பரையை வணங்குகின்றேன்.*

## ஈச்வர வந்தனம் - ईश्वर वन्दनम्

**ओं.यो ब्रह्माणं विदधाति पूर्वं यो वै वेदांश्च प्रहिणोति तस्मै।**
**तं ह देवमात्मबुद्धिप्रकाशं मुमुक्षुर्वै शरणमहं प्रपद्ये ॥**

***ஓம். யோ ப்ரஹ்மாணம் விததாதி பூர்வம் யோ வை***
***வேதாம்ஸ்ச ப்ரஹிணோதி தஸ்மை।***
***தம் ஹ தேவம் ஆத்மபுத்தி ப்ரகாசம்***
***முமுக்ஷு ர்வை சரணமஹம் ப்ரபத்யே॥***

*ஓம். எவர் ப்ரஹ்மாவை முதலில் படைத்தாரோ, எவர் அவருக்கு வேதங்களை அருளினாரோ, புத்தியை ப்ரகாசிக்க செய்கின்ற அந்த தேவனின் பாதங்களை முமுக்ஷு வாகிய நான் சரணடைகின்றேன்.*

***--------ஓம்--------***





श्रीगुरुभ्यो नमः *ஸ்ரீ குருப்யோ நம:*

# तत्त्वबोधः - தத்த்வபோதம்

***மங்களாச்சரணம்***

## वासुदेवेन्द्रयोगीन्द्रं नत्वा ज्ञानप्रदं गुरुम् ।
## मुमुक्षूणां हितार्थाय तत्त्वबोधोऽभिधीयते ॥

***வாஸுதேவேந்த்ரயோகீந்த்ரம் நத்வா ஞானப்ரதம் குரும் /***
***முமுக்ஷு ணாம் ஹிதார்த்தாய தத்வபோதோ(அ)பிதீயதே //***

***பதார்த்தம்:***

**ज्ञानप्रदम्** ***ஞானப்ரதம்-*** *ஞானத்தை வழங்கும்*

**योगीन्द्रम्** ***யோகீந்த்ரம்-****யோகிகளுக்கு தலைவனாகிய*

**वासुदेवेन्द्र** ***வாஸுதேவேந்த்ர -*** *வாஸுதேவேந்த்ராகிய*

**गुरुम्** ***குரும்-*** *குருவை*

**नत्वा** ***நத்வா-*** *நமஸ்கரித்து*

**मुमुक्षूणाम्** ***முமுக்ஷுணாம்-****முக்தியில் நாட்டமுள்ளவர்களின்*

**हितार्थाय** ***ஹிதார்த்தாய-*** *நன்மையின் பொருட்டு*

**तत्त्वबोधः** ***தத்வபோத:-*** *தத்வபோதமானது*

**अभिधीयते** ***அபிதீயதே-*** *கூறப்படுகின்றது.*

***பொழிப்புரை:*** *ஞானத்தை வழங்கக்கூடிய யோகிகளுக்கு ஈசனாகிய (தலைவனாகிய) வாஸுதேவராகிய இந்த்ரரை (இறைவனை) குருவை நமஸ்கரித்து, முக்தியில் நாட்டம் உள்ளவர்களுக்கு ஹிதம் செய்யும் பொருட்டு இனி தத்வபோதமானது உபதேசிக்கப்படுகின்றது.*



## साधनचतुष्टयसंपन्नाधिकारिणां मोक्षसाधनभूतं तत्त्वविवेकप्रकारं वक्ष्याम: ।

***ஸாதன-சதுஷ்டய-ஸம்பன்னாதிகாரிணாம் மோக்ஷஸாதனபூதம் தத்த்வ-விவேக-ப்ரகாரம் வக்ஷ்யாம: ।***

***ஸாதன-சதுஷ்டய -*** *ஸாதன-சதுஷ்டயம் என்ற நான்கு தகுதிகளை,* ***ஸம்பன்னாதிகாரிணாம்*** *– நன்றாக அடைந்த யோக்யதை உள்ளவர்களுக்கு (அதிகாரிகளுக்கு[1]),* ***மோக்ஷ ஸாதன பூதம் -*** *மோக்ஷத்திற்கு ஸாதனமாகிய,* ***தத்த்வ-விவேக-ப்ரகாரம் -*** *தத்துவத்தை விவேகம் செய்கின்ற – விசாரம் செய்து பிரித்தறிகின்ற முறையைப் பற்றி,* ***வக்ஷ்யாம: -*** *கூற போகின்றோம்.*

*ஸாதன-சதுஷ்டயம் என்ற நான்கு தகுதிகளை உடைய யோக்யமானவர்களுக்கு (அதிகாரிகளுக்கு) மோக்ஷத்திற்கு ஸாதனமாகிய (கருவியாகிய) தத்துவத்தை விவேகம் செய்கின்ற அதாவது, விசாரம் செய்து பிரித்தறிகின்ற முறையைப் பற்றி கூற போகின்றோம்.*

*(இந்நூலில் ஆச்சார்யர் ஸ்ரீசங்கரர், தான் கூறுகின்ற ஒவ்வொரு புதிய சப்தங்களுக்கும்- பரிபாஷைகளுக்குமான அர்த்தங்களை தானே அடுத்த, அடுத்த வரிகளில் சொல்கின்றார். இங்கு மேலே,* ***ஸாதன-சதுஷ்டயம்*** *என்ற புதிய சப்தம் உபயோகப்படுத்தப்பட்டுள்ளது. ஸாதன சதுஷ்டயத்தை குறித்து தானே கேள்வி கேட்டு, தானே பதிலையும் சொல்கின்றார். இவ்விதமாகவே இந்த நூல் முழுமையும் கேள்வி-பதில் வடிவத்தில் வடிவமைக்கப் பட்டுள்ளது. இதனால் இந்நூலை கேட்பவர்களுக்கு எளிதில் புரிந்து கொள்ள முடியும்.)*

------------------------------

*1.**அதிகாரி**-தகுதி உடையவர் அதிகாரி என்று சொல்லப்படுவர்.*

## *1.ஸாதன-சதுஷ்டய ப்ரகரணம்*

**साधनचतुष्टयं किम्?**
***ஸாதன-சதுஷ்டயம் கிம்?***

***ஸாதன****- ஸாதனங்கள் (கருவிகள்),* ***சதுஷ்டயம்****- நான்கு,* ***கிம்*** *–என்ன?*

***ஸாதன-சதுஷ்டயம் என்றால் என்ன?***
*(வேதாந்த விசாரம் செய்வதற்கு தேவையான ஸாதன-சதுஷ்டயம் என்ற நான்கு ஸாதனங்கள் என்றால் என்ன?)*

**नित्यानित्यवस्तुविवेकः । इहामुत्रार्थफलभोगविरागः । शमादिषट्कसंपत्तिः । मुमुक्षुत्वं चेति ।**
***நித்யாநித்யவஸ்து விவேக: / இஹாமுத்ரார்த்த-பலபோகவிராக: / சமாதிஷட்கஸம்பத்தி: / முமுக்ஷுத்வம் சேதி /***

**1.नित्यानित्यवस्तुविवेकः ।**
***நித்யாநித்யவஸ்து விவேக: /***

*நித்ய-அநித்ய-வஸ்து விவேக:*

***நித்ய****- நிலையான, மற்றும்* ***அநித்ய****-நிலையில்லாத* ***வஸ்து*** *– பொருள் எது என்று* ***விவேக:****- பிரித்தறியும் தன்மை.*

*இவ்வுலகில் நம்மால் அடையப்பட்ட மற்றும் அடைய நினைக்கின்றவைகளில் எவை-எவை நிலையானவை (நித்யமானவை) என்றும், எவை-எவை நிலையற்றவை (அநித்யமானவை) என்றும் பிரித்தறியும் தன்மைக்கு* ***'விவேகம்'*** *என்று பெயராகும்.*

**2.इहामुत्रार्थफलभोगविरागः ।**
***இஹாமுத்ரார்த்த-பலபோகவிராக: /***

***இஹ****-இவ்வுலக,* ***அமுத்ர****- பரலோக,* ***பலபோக****-கர்மபல போகங்களில்* ***விராக:****- ஆசையில்லாமை.*

*இவ்வுலகிலும், மேலுலகங்களிலும் உள்ள கர்மபலன்களாகிய சுகபோகங்களை அனுபவிக்க வேண்டும் என்ற இச்சை இல்லாமைக்கு வைராக்யம் என்று பெயராகும்.*

**3. शमादिषट्कसंपत्तिः ।**
***சமாதிஷட்கஸம்பத்தி: /***

***சமாதி****(சம+ஆதி)- சமம் முதலான,* ***ஷட்க****-ஆறு,* ***ஸம்பத்தி****-செல்வங்கள்.*

*சமம் முதலான ஆறு செல்வங்கள்.*
*(ஆறு செல்வங்கள் என்னென்ன என்று பின்னால் சொல்லப்படும்).*

**4. मुमुक्षुत्वं चेति ।**
***முமுக்ஷுத்வம் சேதி /***

***முமுக்ஷுத்வம்*** *– விடுதலை அடைய வேண்டும் என்ற வேட்கை,* ***சேதி (ச+இதி)*** *- என்ற இவைகள்.*

*ஸம்ஸார பந்தத்திலிருந்து விடுதலை அடைய வேண்டும் என்ற இச்சைக்கு முமுக்ஷுத்வம் என்று பெயராகும்.*

*இவை நான்கும்* ***ஸாதன சதுஷ்டயங்கள்*** *என சொல்லப்படும்.*

***<u>ஸாதன சதுஷ்டயங்கள்</u>***



***1. விவேகம் 2. வைராக்யம் 3. சமாதி-ஷட்க ஸம்பத்தி: 4 முமுக்ஷுத்வம்***

----------------

***மேலே ஸாதன-சதுஷ்டயங்கள் என்று பெயர் மாத்திரமே சொல்லப்பட்டது. இனி ஸாதன-சதுஷ்டயங்கள் என்றால் என்ன என்பதைக் குறித்து லக்ஷணங்கள் சொல்லப்படுகின்றது.***

--------------------

## *1.நித்யாநித்யவஸ்து விவேக:*

**1.नित्यानित्यवस्तुविवेक: क:?**
***நித்யாநித்யவஸ்து விவேக: க:?***

*__நித்ய__-நிலையான, __அநித்ய__-நிலையில்லாத __வஸ்து__-பொருட்களை __விகேக:__ -பிரித்தறியும் விவேகம், __க:__ -என்றால் என்ன?*

***நிலையான பொருள்-நிலையற்ற பொருள் ((நித்யமான வஸ்து, அநித்யமான வஸ்து) என்று பிரித்தறியும் விவேகம் என்றால் என்ன?***

**नित्यवस्तु एकं ब्रह्म तद् व्यतिरिक्तं सर्वम् अनित्यम् । अयम् एव नित्यानित्यवस्तु विवेक: ।**
***நித்யவஸ்து ஏகம் ப்ரஹ்ம தத் வ்யதிரிக்தம் ஸர்வம் அநித்யம் | அயம் ஏவ நித்யாநித்யவஸ்து விவேக: |***

*__நித்யவஸ்து-__ நிலையான வஸ்து (பொருள்) __ஏகம் ப்ரஹ்ம -__ ப்ரஹ்மம் ஒன்றேயாகும். __தத்-__அதற்கு __வ்யதிரிக்தம்-__ வேறான __ஸர்வம்-__அனைத்தும் __அநித்யம்-__நிலையற்றவைகளாகும். __அயம் ஏவ-__இதுவே __நித்யாநித்யவஸ்து விவேக:-__ நிலையான-நிலையற்ற(நித்ய-அநித்ய) வஸ்து (பொருள்) விவேகம் என்ற பிரித்தறிதலாகும்.*

*நிலையான நித்யமான வஸ்து (பொருள்) ப்ரஹ்மம்* ஒன்றேயாகும். அதற்கு வேறான அனைத்தும் நிலையற்றவைகளே ஆகும் – என்று இவ்விதமாக பிரித்தறிதலே __‘நித்யாநித்ய வஸ்து விவேகம்’__ என்ற பிரித்தறிதலாகும்-பகுத்தறிதலாகும்.*

---------------------------------------

****ப்ரஹ்மம் என்ற சப்தத்தின் பொருள் பின்னால் சொல்லப்படும். இங்கு இப்பொழுது ப்ரஹ்மம் என்பதற்கு ‘இறைவன்’ என்று மட்டும் அர்த்தம் கொண்டால் போதுமானது.***

## *2.வைராக்யம் என்ற விராகம்*

**2.विरागः कः?**

***விராக: க:?***

***விராக:*** *-விராகம் (வைராக்யம்)* ***க:-*** *என்றால் என்ன?*

***விராகம் (என்ற வைராக்யம்) என்றால் என்ன?***

**इहस्वर्गभोगेषु इच्छाराहित्यम् ।**

***இஹ-ஸ்வர்க-போகேஷு இச்சா-ராஹித்யம் |***

***இஹ****-இவ்வுலக,* ***ஸ்வர்க போகேஷு****-ஸ்வர்க போகங்களில்* ***இச்சா-ராஹித்யம்*** *- ஆசை இல்லாதிருத்தல்.*

*இவ்வுலகிலும், ஸ்வர்கம் முதலிய பரலோகங்களிலும் உள்ள போக விஷயங்களில், அவற்றை அனுபவிக்க வேண்டும் என்ற ஆசை இல்லாதிருத்தல்* ***'விராகம்'*** *என்று சொல்லப்படும். ஆசை இல்லாத தன்மையை* ***'வைராக்யம்'*** *என்று சொல்வார்கள்.*

## *3.சமாதி ஷட்க ஸம்பத்தி:*

**3.शमादिसाधनसंपत्तिः का?**

***சமாதி ஸாதன ஸம்பத்தி: கா?***

***சமாதி (சம-ஆதி)*** *– சமம் முதலான,* ***ஸாதன-ஸம்பத்தி*** *– ஸாதனங்களாகிய செல்வங்கள்(ஸம்பத்தி)* ***கா?*** *- எவை?*

***சமம் முதலான ஸாதனங்களாகிய செல்வங்கள் (ஸம்பத்தி) எவை?***

**शमो दम उपरमः तितिक्षा श्रद्धा समाधानं च इति ।**

***சமோ தம உபரம: திதிக்ஷா ச்ரத்தா ஸமாதானம் ச இதி |***

***சமோ*** *– சமம்,* ***தம:*** *- தமம்,* ***உபரம:*** *- உபரமம்,* ***திதிக்ஷா*** *– திதிக்ஷை,* ***ச்ரத்தா*** *–ச்ரத்தை,* ***ச*** *– மற்றும்* ***ஸமாதானம்*** *– ஸமாதானம்,* ***இதி*** *– என்ற இவைகள்.*

***சமம், தமம், உபரமம், திதிக்ஷை, ச்ரத்தை, மற்றும் ஸமாதானம், என்ற இவைகள் சமாதி-ஷட்க ஸம்பத்தி: என்று சொல்லப்படுகின்றன.***

**शमादिसाधनसंपत्तिः**

***சமாதி-ஷட்க ஸம்பத்தி:***

| 1 | 2 | 3 | 4 | 5 | 6 |
|---|---|---|---|---|---|
| ***சமம்*** | ***தமம்*** | ***உபரதி*** | ***திதிக்ஷா*** | ***ச்ரத்தா*** | ***ஸமாதானம்*** |

*(இனி இவை ஒவ்வொன்றையும் குறித்து ஆச்சார்யர் கேள்வி கேட்டு பதில் சொல்கின்றார்).*

**1.शमः कः?**

***1.சம: க:?***

***சம:*** *- சமம்,* ***க:*** *- என்றால் என்ன?*

***சமம் என்றால் என்ன?***

**मनो निग्रहः।**

***மனோ நிக்ரஹ: /***

***மனோ*** *–மனதின் எண்ணங்களை,* ***நிக்ரஹ:*** *- அடக்குதல், நிறுத்துதல்.*

***மனதின் எண்ணங்களை ஒரே விஷயத்தில் ஒருமுகப் படுத்துதலை பழகி, பின்னர் அந்த ஒரே விஷயத்தில் (object) ல்-மனதை நிறுத்துதலுக்கு மனோநிக்ரஹம் என்று பெயர்.***

**2.दमः कः?**

***2.தம: க:?***

***தம:*** *- தமம்,* ***க: ?*** *– என்றால் என்ன?*

***தமம் என்றால் என்ன?***

**चक्षुरादि बाह्य इन्द्रिय निग्रहः।**

***சக்ஷு ராதி பாஹ்ய இந்திரிய நிக்ரஹ: /***

***சக்ஷு ராதி*** *(சக்ஷு : ஆதி) – கண்கள் முதலிய,* ***பாஹ்ய*** *– வெளி செல்லும்,* ***இந்த்ரிய*** *– புலன்களை,* ***நிக்ரஹம்*** *– அடக்குதல், நிறுத்துதல்.*

***கண்கள் முதலிய வெளிச்செல்லும் ஐந்து புலன்களை (ஐம்பொறிகளை) அடக்குதலுக்கு, நிறுத்துதலுக்கு தமம் என்று பெயர்.*** *கண்கள், காதுகள், மூக்கு, நாக்கு, தோல் முதலிய ஐந்து புலன்களை அவற்றினுடைய விஷயங்களாகிய வெளியிலுள்ள காட்சி(ரூபம்), ஒலி, வாசனை, சுவை, தொடு உணர்ச்சி முதலிய ஐந்து விஷயங்களோடு அவசியம் இல்லாமல் தொடர்பு கொள்வதை தடுத்து நிறுத்துதல்* ***'தமம்'*** *என்று சொல்லப்படுகின்றது.*

**3.उपरम: क:?**
***3.உபரம: க:?***

***உபரம:*** *- உபரமம்,* ***க:?*** *– என்றால் என்ன?*

***உபரமம் (அல்லது) உபரதி என்றால் என்ன?***

**स्वधर्म अनुष्ठानम् एव ।**
***ஸ்வதர்ம அனுஷ்டானம் ஏவ |***

***ஸ்வதர்ம*** *– தன்னுடைய தர்மத்தை (கர்மத்தை)* ***அனுஷ்டானம்****– அனுஷ்டித்தல்,* ***ஏவ*** *– மட்டுமே.*

***தன்னுடைய ஸ்வதர்மத்தை (தனக்கு விதிக்கப்பட்ட கர்மத்தை) மட்டுமே அனுஷ்டித்தலுக்கு உபரமம் என்று பெயராகும்.***

**4.तितिक्षा का?**
***4.திதிக்ஷா கா?***

***திதிக்ஷா*** *– திதிக்ஷை,* ***கா?*** *– என்றால் என்ன?*

***திதிக்ஷை என்றால் என்ன?***

**शीतोष्णसुखदुःखादिसहिष्णुत्वम् ।**
***சீதோஷ்ண ஸுகது:க்காதி ஸஹிஷ்ணுத்வம் |***

***சீதோஷ்ண (சீத-உஷ்ண)*** *– குளிர்-வெப்பம்,* ***ஸுக-துக்க-ஆதி*** *- இன்பம், துன்பம் முதலானவற்றை* ***ஸஹிஷ்ணுத்வம்****– சகித்துக் கொள்ளுதல்.*

*குளிர்-வெப்பம், சுகம்-துக்கம் (பசி-தாகம், மானம்-அபமானம், லாபம்-நஷ்டம்) முதலான, இரட்டைகளை (த்வந்த்வங்களை) எதிர்வினை புரியாமலும், புலம்பல்கள் இல்லாமலும் சகித்துக் கொள்ளுதலுக்கு* ***திதிக்ஷா*** *என்று பெயராகும்.*

**5.श्रद्धा कीदृशी?**
***5.ச்ரத்தா கீத்ருசீ |***

***ச்ரத்தா*** *– ச்ரத்தை,* ***கீத்ருசீ*** *– எவ்விதமானது?*

***ச்ரத்தை என்பது எவ்விதமானது?***

**गुरुवेदान्तवाक्येषु विश्वासः श्रद्धा ।**
***குரு-வேதாந்த-வாக்யேஷு விச்வாஸ: ச்ரத்தா |***

*குரு – குரு உபதேசிக்கின்ற,* ***வேதாந்த*** *– உபநிஷத,* ***வாக்யேஷு****– (மஹா)வாக்கியங்களில் (உண்டாகின்ற-வைக்கின்ற),* ***விச்வாஸ:****-திடமான நம்பிக்கை,* ***ச்ரத்தா*** *– ச்ரத்தை எனப்படும்.*

***குரு மற்றும் அவர் உபதேசிக்கின்ற வேதாந்த வாக்கியங்களிலும், அவர் சொல்வதும், வேதாந்தம் சொல்வதும் ஸத்யம் தான் என்ற நிச்சயமான எண்ணத்திற்கு– விச்வாசத்திற்கு – திடமான நம்பிக்கைக்கு ‘ச்ரத்தா’ என்று பெயராகும்.***

**6.समाधानं किम्?**
***6.ஸமாதானம் கிம்?***

***ஸமாதனம்*** *– ஸமாதி,* ***கிம்?*** *– என்றால் என்ன?*

***ஸமாதானம் என்ற ஸமாதி என்றால் என்ன?***

चित्त एकाग्रता ।
***சித்த ஏகாக்ரதா |***

***சித்த*** *– மனதின் (சித்தத்தின்),* ***ஏகாக்ரதா*** *– ஒருமுனைப்பு தன்மை*

***மனதின் (சித்தத்தின்) ஒருமுனைப்பட்ட தன்மைக்கு சித்த ஏகாக்ரதா என்று பெயர். ஒரே பொருளில் மனம் ஒன்றி, அதனோடு கலந்து போவது ஸமாதானம் என்ற ஸமாதி ஆகும்.***

*ஸாதன சதுஷ்டயத்தின் மூன்றாவதான 'சமாதி-ஷட்க ஸம்பத்தி' முடிந்தது. இனி நான்காவது தகுதி சொல்லப்படுகின்றது.*

**4. मुमुक्षुत्वं किम्?**
***முமுக்ஷு த்வம் கிம்?***

***முமுக்ஷு த்வம்*** *– முமுக்ஷு த்வம்,* ***கா ?*** *– என்றால் என்ன?.*

***முமுக்ஷு த்வம் என்றால் என்ன?***

**मोक्षो मे भूयाद् इति इच्छा ।**
**மோக்ஷோ மே பூயாத் இதி இச்சா |**

**மே** *– எனக்கு,* ***மோக்ஷோ*** *– மோக்ஷம் என்ற ஆன்ம விடுதலையானது,* ***பூயாத்*** *– உண்டாகட்டும்,* ***இதி*** *– என்ற* ***இச்சா*** *– (தீவிர) ஆசைக்கு முமுக்ஷு த்வம் என்று பெயர்.*

***எனக்கு (ஆன்மாவிற்கு) பிறந்து-பிறந்து இறக்கின்ற ஸம்ஸாரத்திலிருந்து மோக்ஷம் என்ற விடுதலையானது உண்டாகட்டும் என்ற தீவிரமான இச்சைக்கு 'முமுக்ஷு த்வம்' என்று பெயராகும்.***

*இந்த விதமாக மோக்ஷம் அடைய வேண்டும் என்ற முமுக்ஷு த்வம் உள்ளவனுக்கு* ***'முமுக்ஷு'*** *என்றும் பெயராகும்.*

**एतत् साधन चतुष्टयम् ।**

***ஏதத் ஸாதன சதுஷ்டயம் ।***

***ஏதத்*** *– இது,* ***ஸாதன சதுஷ்டயம்*** *– ஸாதன சதுஷ்டயம் என்ற நான்கு ஸாதனங்களாகும் (கருவிகளாகும்).*

*மேலே சொல்லப்பட்ட இவைகளே வேதாந்தத்தில் ப்ரவேசிக்க நினைக்கின்ற முமுக்ஷுக்களுக்கு* ***'ஸாதன சதுஷ்டயம்'*** *என்ற நான்கு ஸாதனங்களாகும் அதாவது கருவிகளாகும்.*

**ततस्तत्त्वविवेकस्याधिकारिणो भवन्ति ।**

***ததஸ்-தத்த்வவிவேகஸ்யாதிகாரிணோ பவந்தி ।***

***தத:*** *- அதன் பிறகு (ஸாதன சதுஷ்டயத்தை அடைந்த பிறகு அவர்கள்),* ***தத்த்வ-விவேகஸ்ய*** *– தத்துவத்தை விவேகம் செய்வதற்கு,* ***அதிகாரிணோ*** *–யோக்யமுள்ளவர் களாக,* ***பவந்தி*** *- ஆகின்றார்கள்*

***ஸாதன சதுஷ்டயத்தை அடைந்த பிறகு அவர்கள் தத்துவத்தை விவேகம் செய்வதற்கு யோக்யமுள்ளவர் களாக – அதிகாரம் உள்ள அதிகாரிகளாக ஆகின்றார்கள்.***

*--------முதல் ப்ரகரணம் முடிந்தது---------*



## *2.தத்துவ விவேக ப்ரகரணம்*

**तत्त्वविवेक: क: ?**

***தத்த்வ-விவேக: க: ?***

***தத்த்வ (தத்-த்வ)*** *– உண்மையானதை – யதார்த்தமானதை,* ***விவேகம்*** *– பிரித்தறிதல் என்ற விவேகம்,* ***க:*** *- என்றால் என்ன?*

***தத்துவ விவேகம் என்றால் என்ன?***
*(உண்மை பொருளை பிரித்தறிகின்ற என்ற விவேகம், என்றால் என்ன?)*

**आत्मा सत्यम् तदन्यत् सर्वं मिथ्येति ।**

***ஆத்மா ஸத்யம் ததன்யத் ஸர்வம் மித்யேதி |***

***ஆத்மா****- ஆத்மா என்ற நான் என்ற தத்துவம் (மட்டுமே)* ***ஸத்யம்****- ஸத்தியமானது.* ***தத்-அன்யத்*** *- அதற்கு அந்நியமான,* ***ஸர்வம்*** *– அனைத்தும்,* ***மித்யா*** *– பொய்யானவையே* ***இதி****- என்பது.*

*ஆத்மா என்ற நான் என்ற தத்துவம் (மட்டுமே) ஸத்தியமானது-உண்மையானது. அதற்கு (ஆத்மாவிற்கு-தனக்கு) அந்நியமான (அநாத்ம விஷயங்கள்) அனைத்தும் பொய்யானவை மித்யாவானவை – தோற்றமாத்திரமா னவை என்ற இவ்விதமாக பிரித்தறிதலே – நிச்சயம் செய்வதே* ***தத்துவ விவேகம்*** *என்பதாகும். இதனை* ***ஆத்ம-அநாத்ம விவேகம்*** *என்றும் சொல்வார்கள். இதுவே ஆத்மஞானத்திற்கு ஸாதனமாகும்.*

**आत्मा क: ?**

***ஆத்மா க: ?***

***ஆத்மா*** *– ஆத்மா என்ற நான் என்பது* ***க:*** *- என்ன?, யார்?*

***ஆத்மா என்றால் என்ன?***

***ஆத்மா என்ற சப்தத்திற்கு தமிழில் 'நான்' என்று அர்த்தம் ஆகும். அதனால், ஆத்மா என்றால் என்ன? (அல்லது) நான் யார்? என்றும் அர்த்தம் கொள்ளலாம்.***

**स्थूलसूक्ष्मकारणशरीराद्व्यतिरिक्तः पञ्चकोशातीतः सन् अवस्थात्रयसाक्षी सच्चिदानन्दस्वरूपः सन् यस्तिष्ठति स आत्मा ।**

***ஸ்தூல-ஸூக்ஷ்ம-காரண-சரீராத்-வ்யதிரிக்த: பஞ்சகோசாதீத: ஸந் அவஸ்தாத்ரயஸாக்ஷீ ஸச்சிதாநந்த-ஸ்வரூப: ஸந் யஸ்திஷ்டதி ஸ ஆத்மா |***

***ஸ்தூல** - தூலம் என்ற பரு உடல், **ஸூக்ஷ்ம** - சூட்சும உடல் **காரண சரீராத்** - காரண உடல்களிலிருந்து **வ்யதிரிக்த:** - வேறானதாக, **பஞ்சகோசாதீத: (பஞ்ச-கோச-அதீத:)**- ஐந்து கோசங்களைக் கடந்ததாக **ஸந்** - இருந்து கொண்டு, **அவஸ்தாத்ரய-ஸாக்ஷீ** - மூன்று அவஸ்தைகளுக்கு ஸாக்ஷி யாக, **ஸச்சிதாநந்த-ஸ்வரூப:** -ஸத்-சித்-ஆனந்த ஸ்வரூப மாக **ஸந்**-இருந்து கொண்டு, **ய:**-எது **திஷ்டதி**– நிற்கின் றதோ-இருக்கின்றதோ **ஸ** - அது **ஆத்மா** - ஆத்மா ஆகும்.*

***தூலஉடல் என்ற பருஉடல், சூட்சும உடல் மற்றும் காரண உடல்களிலிருந்து வேறானதாகவும், ஐந்து கோசங்களைக் கடந்ததாகவும் இருந்து கொண்டு, மூன்று அவஸ்தைக ளுக்கு ஸாக்ஷியாக, ஸத் (தூய இருப்பாக) – சித் (தூய அறிவாக) - ஆனந்த(தூய ஆனந்த) ஸ்வரூபமாக இருந்து கொண்டு, எது நிற்கின்றதோ-இருக்கின்றதோ – விளங்கு கின்றதோ அது ஆத்மா ஆகும்.***

-------------------------

***<u>ஆத்மாவின் லக்ஷணம்</u>***

*1.மூன்று சரீரங்களுக்கு வேறானது.*
*2.ஐந்து கோசங்களை கடந்தது.*
*3.மூன்று அவஸ்தைகளுக்கு ஸாக்ஷி.*
*4.ஸத்-சித்-ஆனந்த ஸ்வரூபம்.*

***இனி ஆச்சார்யர் இந்த மூன்றில் ஒவ்வொன்றையும் தனித்தனியாக சொல்கின்றார்.***

## *3.மூன்று சரீரங்கள்*

### *1.ஸ்தூலசரீரம் (பரு உடல் - தூல தேஹம்)*

**स्थूलशरीरं किम् ?**
***ஸ்தூலசரீரம் கிம் ?***

***ஸ்தூல சரீரம்*** *– பரு உடல்* ***கிம்?*** *– என்றால் என்ன?*

***ஸ்தூல சரீரம் என்பது எது?*** *(பரு உடல் என்பது எது?)*

**पञ्चीकृतपञ्चमहाभूतैः कृतं सत्कर्मजन्यं सुखदुःखादिभोगायतनं शरीरं अस्ति जायते वर्धते विपरिणमते अपक्षीयते विनश्यतीति षड्विकारवदेतत्स्थूलशरीरम् ।**
***பஞ்சீக்ருதபஞ்சமஹாபூதை: க்ருதம் ஸத்கர்மஜன்யம் ஸுகது:க்காதி போகாயதனம் சரீரம் அஸ்தி ஜாயதே வர்ததே விபரிணமதே அபக்ஷீயதே வினச்யதீதி ஷட்விகாரவத்-ஏதத்-ஸ்தூலசரீரம் |***

***பஞ்சீக்ருத-****பஞ்சீகரணம் செய்யப்பட்ட* ***பஞ்சமஹா பூதை: க்ருதம் -*** *ஐந்து மஹா பூதங்களிலிருந்து செய்யப் பட்டதாக,* ***ஸத்கர்மஜன்யம்-****பூர்வ புண்ணிய கர்மங்களால் உண்டானதாக,* ***ஸுகது:க்காதி-****இன்பம்-துன்பம் முதலிய வற்றை* ***போக-ஆயதனம்-****போகம் செய்வதற்கான இருப் பிடமாகவும் உள்ள* ***சரீரம்*** *–(இந்த பரு) உடலானது* ***அஸ்தி-*** *இருத்தல்* ***ஜாயதே -*** *பிறத்தல்* ***வர்ததே -*** *வளர்தல்* ***விபரிணமதே -*** *மாற்றமடைதல்* ***அபக்ஷீயதே*** *– தேய்வடை தல்* ***வினஸ்யதி*** *– இறந்து போதல்* ***இதி -*** *என்ற* ***ஷட் விகாரவத் -*** *ஆறு விகாரங்களை உடையதாக உள்ள* ***ஏதத் -*** *இது* ***ஸ்தூலசரீரம் -*** *ஸ்தூல சரீரம் என்ற பரு உடலாகும்.*

*பஞ்சீகரணம் செய்யப்பட்ட ஐந்து மஹாபூதங்களிலி ருந்து செய்யப்பட்டதாக, பூர்வ புண்ணிய கர்மங்களால் உண்டானதாக, இன்பம்-துன்பம் முதலியவற்றை போகம் செய்வதற்கான இருப்பிடமாகவும் உள்ள (இந்த பரு) உடலானது* ***1.அன்னை வயிற்றில் கர்பத்தில் இருத்தல்,***

***2.பிறத்தல், 3.வளர்தல், 4.மாற்றம் அடைதல், 5.தேய்வடைதல், 6.இறந்துபோதல்*** *என்ற ஆறு விகாரங்களை உடையதாக உள்ள இது ஸ்தூல சரீரம் என்ற பரு உடலாகும்.*

-----------------------------

## *2.ஸூக்ஷ்மசரீரம் (சூட்சும தேஹம்)*

**सूक्ष्मशरीरं किम् ?**
***ஸூக்ஷ்மசரீரம் கிம் ?***

***ஸூக்ஷ்ம சரீரம்*** *– சூட்சும சரீரம்* ***கிம்?*** *– என்றால் என்ன?*
***ஸூக்ஷ்ம தேஹம் என்பது என்ன?***

**अपञ्चीकृतपञ्चमहाभूतैः कृतं सत्कर्मजन्यं सुखदुःखादिभोग साधनं पञ्चज्ञानेन्द्रियाणि पञ्चकर्मेन्द्रियाणि पञ्चप्राणादयः मनश्चैकं बुद्धिश्चैका एवं सप्तदशकलाभिः सह यत्तिष्ठति तत्सूक्ष्मशरीरम् ।**

***அபஞ்சீக்ருதபஞ்சமஹாபூதை: க்ருதம் ஸத்கர்மஜன்யம் ஸுகது:க்காதி போகஸாதனம் பஞ்சஞானேந்த்ரியாணி பஞ்சகர்மேந்த்ரியாணி பஞ்ச ப்ராணாதய: மனஸ்சைகம் புத்திஸ்சைகா ஏவம் ஸப்ததசகலாபி: ஸஹ யத்திஷ்டதி தத்ஸூக்ஷ்மசரீரம் |***

***அபஞ்சீக்ருத*** *– பஞ்சீகரணம் செய்யப்படாத* ***பஞ்சமஹா பூதை: -*** *பஞ்ச மஹாபூதங்களால்* ***க்ருதம்*** *– செய்யப்பட்டதாகவும்* ***ஸத்கர்மஜன்யம்*** *– நல்ல பூர்வ புண்ணிய கர்மங்களால் உண்டானதாகவும்* ***ஸுகது:க்காதி*** *– இன்பம்-துன்பம் முதலானவற்றை* ***போகஸாதனம்*** *– அனுபவிப்பதற்கான ஸாதனமாகவும்-கருவியாகவும்* ***பஞ்ச -*** *ஐந்து* ***ஞானேந்த்ரியாணி -*** *ஞானேந்த்ரியங்கள்* ***பஞ்ச-*** *ஐந்து* ***கர்மேந்த்ரியாணி -*** *கர்மேந்த்ரியங்கள்* ***பஞ்ச ப்ராணாதய: -*** *ஐந்து ப்ராணன் முதலியவைகளும்* ***மனஸ்ச-ஏகம்*** *– மேலும் மனம் ஒன்று* ***புத்திஸ்ச-ஏகா*** *– மற்றும் புத்தி ஒன்று* ***ஏவம் -*** *இவ்விதமாக* ***ஸப்ததச-*** *பதினேழு* ***கலாபி: -*** *கலைகளோடு-அவயவங்களோடு* ***ஸஹ -*** *கூடியதாக* ***யத் -*** *எது* ***திஷ்டதி*** *– நிற்கின்றதோ*

-விளங்குகின்றதோ **தத்** - அது **சூக்ஷ்மசரீரம்** - சூட்சும சரீரம் ஆகும்.

பஞ்சீகரணம் செய்யப்படாத பஞ்ச மஹாபூதங்களால் செய்யப்பட்டதாகவும், பூர்வ-புண்ணிய கர்மங்களால் உண்டானதாகவும் இன்பம்-துன்பம் முதலானவற்றை அனுபவிப்பதற்கான ஸாதனமாகவும்-கருவியாகவும் ஐந்து ஞானேந்த்ரியங்கள் ஐந்து கர்மேந்த்ரியங்கள் ஐந்து ப்ராணன்கள் முதலியவைகளும் மேலும் மனம் ஒன்று மற்றும் புத்தி ஒன்று என்று இவ்விதமாக பதினேழு கலைகளோடு-அவயவங்களோடு கூடியதாக எது நிற்கின்றதோ - விளங்குகின்றதோ அது சூட்சும சரீரம் என்று சொல்லப்படுகின்றது.

-------------------

**இனி மேலே லக்ஷணத்தில் சொல்லப்பட்ட 'பஞ்ச ஞானேந்த்ரியங்கள், பஞ்ச கர்மேந்த்ரியங்கள், பஞ்ச ப்ராணன் இவைகள் குறித்து சொல்லப்படுகின்றது.**

<u>**பஞ்ச ஞானேந்திரியங்கள்**</u>

**श्रोत्रं त्वक् चक्षुः रसना घ्राणम् इति पञ्चज्ञानेन्द्रियाणि ।**

**ச்ரோம் த்வக் சக்ஷு: ரஸனா க்ராணம் இதி பஞ்ச ஞானேந்திரியாணி |**

**ச்ரோம்** – செவி - காதுகள் **த்வக்** - தோல் **சக்ஷு:** - கண்கள் **ரஸனா** - நாக்கு **க்ராணம்** - மூக்கு **இதி** – என்ற இவைகள் **பஞ்சஞானேந்திரியாணி** – ஐந்து ஞானேந்த்ரியங்கள் ஆகும். (ஐந்து அறிவை தரும் கருவிகள் ஆகும்.)

(1) ச்ரோத்ரம் என்ற செவி என்கின்ற காதுகள், (2) த்வக் என்ற தோல், (3) சக்ஷு: என்ற கண்கள், (4) ரஸனா என்ற நாக்கு, (5) க்ராணம் என்ற மூக்கு என்ற இவைகள் ஐந்து ஞானேந்த்ரியங்கள் ஆகும். அதாவது ஐந்து அறிவை தரும் கருவிகள் ஆகும்.

## பஞ்ச ஞானேந்த்ரியங்கள்

*1.ச்ரோத்ரம் – காதுகள் (செவி)*
*2.த்வக் – தோல் (உடல் முழுவதும் போர்த்தப்பட்டுள்ளது)*
*3.சக்ஷு - கண்கள்*
*4.ரஸனா - நாக்கு*
*5.க்ராணம் - மூக்கு*

## ஞானேந்த்ரிய அதிஷ்டான - அபிமான தேவதைகள்

**श्रोत्रस्य दिग्देवता ।**
***ச்ரோத்ரஸ்ய திக்தேவதா /***

***ச்ரோத்ரஸ்ய*** *– காதுகளுக்கு, (அதிஷ்டான தேவதை)* ***திக்தேவதா*** *– திசைகளை தான் என்று அபிமானிக்கும் திக் தேவதை. ச்ரோத்ரம் என்ற காதுகளுக்கு, திசைகளை தான் என்று அபிமானிக்கும் திக் தேவதையே அதிஷ்டான தேவதை ஆகும்.*

**त्वचो वायुः ।**
***த்வசோ வாயு:***

***த்வசோ-****தோலுக்கு, (அதிஷ்டான தேவதை)* ***வாயு-****வாயு தேவதை.*

*தோலுக்கு அதிஷ்டான அபிமான தேவதை வாயு தேவதை ஆகும்.*

**चक्षुषः सूर्यः ।**
***சக்ஷு ஷ: ஸூர்ய:***

***சக்ஷு ஷ:-****கண்களுக்கு, (அதிஷ்டான தேவதை)* ***ஸூர்ய:-*** *சூரிய தேவதை.*

*கண்களுக்கு அதிஷ்டான அபிமான தேவதை ஸூர்ய தேவதை ஆகும்.*

**रसनाया वरुणः ।**
***ரஸனாயா வருண:***

***ரஸனாயா-***_நாக்கிற்கு,(அதிஷ்டான தேவதை)_***வருண:-*** _வருண தேவதை._

_நாக்கிற்கு அதிஷ்டான அபிமான தேவதை வருண தேவதை ஆகும்._

**घ्राणस्य अश्विनौ ।**
***க்ராணஸ்ய அஸ்வினௌ |***

***க்ராணஸ்ய-***_மூக்கிற்கு, (அதிஷ்டான தேவதை)_ ***அச்வினௌ-*** _அச்வினி குமார்கள் தேவதை._

_மூக்கிற்கு அதிஷ்டான அபிமான தேவதை அச்வினி குமாரர்கள் என்ற தேவதை ஆகும்._

**इति ज्ञानेन्द्रियदेवताः ।**
**இதி ஞானேந்திரிய தேவதா |**

**இதி** – _என்ற இவைகள்_ **ஞானேந்த்ரிய** – _ஞானேந்த்ரிய_ **தேவதா** – _தேவதைகளாகும்._
_இவைகள் ஞானேந்த்ரிய தேவதைகளாகும்._

---------------------------

***பஞ்ச ஞானேந்த்ரிய தேவதைகள்***

| ***பஞ்ச ஞானேந்திரியங்கள்*** | ***தேவதைகள்*** |
|---|---|
| ***1.ச்ரோத்ரம் – (செவி)*** | ***திக் தேவதா*** |
| ***2.த்வக்-தோல்*** | ***வாயு தேவதா*** |
| ***3.சக்ஷு – கண்கள்*** | ***ஸூரியன்*** |
| ***4.ரஸனா – நாக்கு*** | ***வருண தேவதா*** |
| ***5.க்ராணம் – மூக்கு*** | ***அஸ்வினி குமாரர்கள்*** |

---------------------------

**ஞானேந்த்ரியங்களுக்கான விஷயங்கள்- செயல்கள்**

**श्रोत्रस्य विषयः शब्दग्रहणम् ।**
***ச்ரோத்ரஸ்ய விஷய: சப்தக்ரஹணம் |***

***ச்ரோத்ரஸ்ய*** – காதுகளுக்கு ***விஷய:*** - விஷயம் ***சப்தக்ரஹணம்*** – சப்தங்களை (ஒலியை) அறிதல்
*காதுகளுக்கு விஷயம் ஒலியை அறிதலாகும்.*

**त्वचो विषयः स्पर्शग्रहणम् ।**
***த்வசோ விஷய: ஸ்பர்ச-க்ரஹணம் |***

***த்வசோ*** – தோலுக்கு ***விஷய:*** - விஷயம் ***ஸ்பர்சக்ரஹணம்*** – தொடு உணர்சியாகும்.
*தோலுக்கு விஷயம் தொடு உணர்ச்சியாகும்.*

**चक्षुषो विषयः रूपग्रहणम् ।**
***சக்ஷு ஷோ விஷய: ரூபக்ரஹணம் |***

***சக்ஷு ஷோ*** – கண்களுக்கு ***விஷய:*** - விஷயம் ***ரூபக்ரஹணம்*** – நிறங்களை அறிதல்.
*கண்களுக்கு விஷயம் நிறங்களை அறிதலாகும். (பொருட்களை சார்ந்தே அவற்றின் வடிவங்களும், நிறங்களும் இருப்பதால், வர்ணங்களை அறிதல் என்று கூறியதால், வடிவங்களையும், அந்த பொருட்களையும் அறிதல் என்று கொள்ள வேண்டும்.*

**रसनाया विषयः रसग्रहणम् ।**
***ரஸனாயா விஷய: ரஸக்ரஹணம் |***

***ரஸனாயா*** – நாக்கிற்கு ***விஷய:*** - விஷயம் ***ரஸக்ரஹணம்*** – சுவைகளை அறிதல்.
*நாக்கிற்கு விஷயம் சுவைகளை அறிதலாகும்.*

**घ्राणस्य विषयः गन्धग्रहणम् इति ।**
***க்ராணஸ்ய விஷய: கந்தக்ரஹணம் இதி |***

***க்ராணஸ்ய*** – *மூக்கிற்கு* ***விஷய:*** - *விஷயம்* ***கந்தக்ரஹணம்*** *–வாஸனைகளை அறிதல்.*
*மூக்கிற்கு விஷயம் வாஸனைகளை அறிதலாகும்.*

---------------------

***பஞ்ச ஞானேந்த்ரியகளின் செயல்கள் (விஷயங்கள்)***

| ***பஞ்ச ஞானேந்திரியங்கள்*** | ***செயல்கள் (விஷயங்கள்)*** |
|---|---|
| ***1.ச்ரோத்ரம் – (செவி)*** | ***சப்த க்ரஹணம்*** |
| ***2.த்வக்-தோல்*** | ***வாயு தேவதா*** |
| ***3.சக்ஷு – கண்கள்*** | ***ஸூரியன்*** |
| ***4.ரஸனா – நாக்கு*** | ***வருண தேவதா*** |
| ***5.க்ராணம் – மூக்கு*** | ***அஸ்வினி குமாரர்கள்*** |

--------------------------

***<u>பஞ்ச ஞானேந்த்ரியங்கள்</u>***
*(அறிவை தரக்கூடிய ஐம்புலன்கள்)*

| | ***இந்த்ரியம் (புலன்கள்)*** | ***அதிஷ்டான தேவதா (ஆதாரதேவதை)*** | ***விஷயம் (செயல்கள்)*** |
|---|---|---|---|
| *1* | *ச்ரோத்ரம் (காது)* | *திக்தேவதை* | *ஒலியை அறிதல்* |
| *2* | *த்வக் (தோல்)* | *வாயு தேவதை* | *தொடு உணர்ச்சியை* |
| *3* | *சக்ஷு: (கண்கள்)* | *ஸூரிய தேவதை* | *நிறத்தை அறிதல்* |
| *4* | *ரஸனா (நாக்கு)* | *வருண தேவதை* | *சுவையை அறிதல்* |
| *5* | *க்ராணம்(மூக்கு)* | *அச்விநிகுமாரர்கள்* | *வாஸனையை அறிதல்* |

-----------------------

## ***<u>கர்மேந்த்ரியங்கள்</u>***

**वाक्पाणिपादपायूपस्थानीति पञ्चकर्मेन्द्रियाणि ।**
***வாக்-பாணி-பாத-பாயூபஸ்தாநீதி பஞ்சகர்மேந்திரியாணி |***

***வாக் -*** *பேசுகின்ற வாய்,* ***பாணி -*** *கைகள்,* ***பாத*** *– கால்கள்,* ***பாயு*** *– மலத்வாரம்,* ***உபஸ்தம்*** *– மூத்ர த்வாரம்,* ***இதி*** *– என்ற இவை* ***பஞ்ச*** *–ஐந்து,* ***கர்மந்த்ரியாணி*** *– கர்மம் செய்கின்ற புலன்கள் ஆகும்.*

**வாக்** *என்ற பேசுகின்ற வாய்,* **பாணி** *என்ற கைகள்,* **பாத** *என்ற கால்கள்,* **பாயு** *என்ற மலத்வாரம்(குதம்),* **உபஸ்தம்** *என்ற மூத்திர த்வாரம்(குறி),* **இதி** *என்ற என்ற இவை கர்மம் செய்கின்ற ஐந்து புலன்கள் ஆகும்.*

***<u>கர்மேந்த்ரியங்களின் அதிஷ்டான –அபிமான தேவதைகள்</u>***

**वाचो देवता वह्निः ।**
***வாசோ தேவதா வஹ்நி: /***

***வாசோ*** *– பேசுகின்ற வாக்கிற்கு,* **தேவதா** *– ஆதார தேவதை,* ***வஹ்நி: -*** *அக்னி.*

*பேசுகின்ற வாக்கிற்கு அபிமான தேவதா (ஆதார தேவதை) அக்னியாகும்.*

**हस्तयोरिन्द्रः ।**
***ஹஸ்தயோரிந்த்ர: /***

***ஹஸ்தயோ: -*** *இரு கைகளுக்கு (தேவதா)-தேவதை* ***இந்த்ர: -*** *இந்திரன். இரு கைகளுக்கு அபிமான – அதிஷ்டான தேவதை இந்திரன் ஆவார்.*

**पादयोर्विष्णुः ।**
***பாதயோர்விஷ்ணு: /***

***பாதயோ: -*** *இரு கால்களுக்கு, (அபிமான தேவதா)* ***விஷ்ணு:-*** *விஷ்ணு.*

*பாதம் என்ற இரு கால்களுக்கு அபிமான – அதிஷ்டான தேவதை விஷ்ணு ஆவார்.*

**पायोर्मृत्युः ।**
***பாயோர்ம்ருத்யு: /***

***பாயோ:*** **-** *மலத்வாரத்திற்கு (குதத்திற்கு அபிமான தேவதா)* ***ம்ருத்யு:*** **-** *எமன்*

*பாயு என்ற மலத்வாரத்திற்கு(குதத்திற்கு) அபிமான – அதிஷ்டான தேவதா ம்ருத்யு: எமன் ஆவார்.*

**उपस्थस्य प्रजापतिः ।**
***உபஸ்தஸ்ய ப்ரஜாபதி: /***

***உபஸ்தஸ்ய*** *– மூத்ர த்வாரத்திற்கு (குறிக்கு அபிமான தேவதா)* ***ப்ரஜாபதி: -*** *ப்ரஜாபதி.*

*உபஸ்தம் என்ற மூத்ர த்வாரத்திற்கு (குறிக்கு) அபிமான தேவதா ப்ரஜாபதி ஆவார்.*

**इति कर्मेन्द्रिय देवताः ।**
***இதி கர்மேந்திரிய தேவதா /***

***இதி*** *– என்ற இவை* ***கர்மேந்த்ரிய*** *– செயல் செய்கின்ற புலன்களின்* ***தேவதா:*** *– தேவதைகள்.*

*மேலே சொல்லப்பட்ட இவை கர்மேந்த்ரியம் என்ற செயல் செய்கின்ற புலன்களின் தேவதைகள் ஆகும்.*

---------------------------

<u>***கர்மேந்த்ரியங்களின் செயல்கள் -விஷயங்கள்***</u>

**वाचो विषयः भाषणम् ।**
***வாசோ விஷய: பாஷணம் |***

***வாசோ*** – *பேசுகின்ற வாக்கிற்கான* ***விஷய: -*** *செயல்,* ***பாஷணம்*** *– பேசுதலாகும்.*

*பேசுகின்ற வாக்கிற்கான செயல் பேசுதலாகும்.*

**पाण्योर्विषयः वस्तुग्रहणम् ।**
***பாண்யோர்விஷய: வஸ்துக்ரஹணம் |***

***பாண்யோ: -*** *கைகளுக்கான* ***விஷய: -*** *செயல்* ***வஸ்து க்ரஹணம்*** *– பொருட்களை எடுத்தல்.*

*பாணி என்ற கைகளுக்கான செயல் பொருட்களை எடுத்தலாகும்.*

**पादयोर्विषयः गमनम् ।**
***பாதயோர்விஷய: கமனம் |***

***பாதயோ: -*** *கால்களுக்கான* ***விஷய: -*** *செயல்* ***கமனம்*** *– நடத்தல்.*

*பாதம் என்ற கால்களுக்கான செயல் கமனம் என்ற நடத்தலாகும்.*

**पायोर्विषयः मलत्यागः ।**
***பாயோர்விஷய: மலத்யாக: |***

***பாயோ: -*** *மலத்வாரம் என்ற குதத்திற்கு,* ***விஷய: -*** *செயல்,* ***மலத்யாக: -*** *மலத்தை வெளியேற்றுதல்.*

*பாயு என்ற மலத்வாரம் என்ற குதத்திற்கான செயல் மலத்தை வெளியேற்றுதல் ஆகும்.*

**उपस्थस्य विषय: आनन्द इति ।**
***உபஸ்தஸ்ய விஷய: ஆநந்த இதி /***

***உபஸ்தஸ்ய*** – *மூத்ர த்வாரம் என்ற குறிக்கு* ***விஷய: -*** *செயல்,* ***ஆநந்த:*** *–ஆனந்தம்* ***இதி*** *– என்பவை.*
*உபஸ்தம் என்ற மூத்ரத்வாரம் என்ற குறிக்கு செயல் ஆனந்தம் என்பதாகும்.*

***<u>பஞ்ச கர்மேந்த்ரியங்கள்</u>***

*(செயல்களைச் கூடிய ஐம்புலன்கள்)*

| | **இந்த்ரியம் (புலன்கள்)** | **அதிஷ்டான தேவதா (ஆதாரதேவதை)** | **விஷயம் (செயல்கள்)** |
|---|---|---|---|
| *1* | *வாக் (வாய்)* | *அக்னி* | *பேசுதல்* |
| *2* | *பாணி (கைகள்)* | *இந்திரன்* | *பொருட்களை எடுத்தல்* |
| *3* | *பாதம் (கால்கள்* | *விஷ்ணு* | *நடத்தல்* |
| *4* | *பாயு (குதம்* | *எமன்* | *மலத்தை வெளியேற்றல்* |
| *5* | *உபஸ்தம்(குறி)* | *ப்ரஜாபதி* | *ஆனந்தம் அடைதல்* |

-----------------------

## *காரணசரீரம்*

**कारणशरीरं किम् ?**

***காரணசரீரம் கிம் ?***

***காரண சரீரம்*** *– காரண உடல்* ***கிம்?*** *– என்றால் எது?*

*காரண சரீரம் என்ற காரண உடல் என்பது எது? (ஸ்தூல சரீரம் மற்றும் ஸூக்ஷ்ம சரீரம் ஆகியவற்றிற்கு காரணமாக இருப்பது காரண சரீரம் ஆகும்.)*

**अनिर्वाच्यानाद्यविद्यारूपं शरीरद्वयस्य कारणमात्रं सत्स्वरूपाज्ञानं निर्विकल्पकरूपं यदस्ति तत्कारणशरीरम् ।**

***அநிர்வாச்ய-அநாதி-அவித்யாரூபம் சரீரத்வயஸ்ய காரணமாத்ரம் ஸத்ஸ்வரூப-அக்ஞானம் நிர்விகல்பக ரூபம் யத்-அஸ்தி தத்-காரணசரீரம் |***

***அநிர்வாச்ய*** *- இது என்று வாக்கினால் வரையறுத்து – நிச்சயம் செய்து கூற முடியாததாக,* ***அநாதி -*** *ஆதி (தொடக்கம்) இல்லாததாக* ***அவித்யாரூபம் -*** *அக்ஞான வடிவானதாக – (இருள் போன்று) சொந்த இருப்பில்லாத தாக* ***சரீர-த்வயஸ்ய -*** *(ஸ்தூல – ஸூக்ஷ்மம் என்ற) இரு சரீரங்களுக்கு* ***காரணமாத்ரம்****–காரணமாக மட்டுமாகவும்,* ***ஸத்-ஸ்வரூப-அக்ஞானம்****– (ஆத்மா என்ற) ஸத் ஸ்வ ரூபத்தை மறைக்கின்ற அக்ஞானமாக (அறியாமையாக)* ***நிர்விகல்பகரூபம்*** *– விகல்பம் ஏதுமற்றதாக* ***யதஸ்தி****–எது இருக்கின்றதோ* ***தத்-****அது* ***காரணசரீரம்****– காரணசரீரம்.*

*இது என்று வாக்கினால் வரையறுத்து – நிச்சயம் செய்து கூற முடியாததாக, ஆதி (தொடக்கம்) இல்லாததாக அக்ஞான வடிவானதாக– (இருள் போன்று) சொந்த இருப்பில்லாததாக, (ஸ்தூல – ஸூக்ஷ்மம் என்ற) இரு சரீரங்களுக்கு காரணமாக மட்டும் இருப்பதாகவும், (ஆத்மா என்ற) ஸத்ஸ்வரூபத்தை மறைக்கின்ற*

*அக்ஞானமாகவும் (அறியாமையாகவும்), விகல்பம் ஏதுமற்றதாக எது இருக்கின்றதோ அது காரண சரீரம் ஆகும்.*

***காரண சரீரம் என்பது ஆத்மாவை மறைத்திருக்கின்ற அக்ஞானம் மட்டுமே ஆகும்.***

--------------------------------------------

***<u>அவஸ்தாத்ரயம்- மூன்று அவஸ்தைகள்</u>***

**अवस्थात्रयं किम् ?**

***அவஸ்தாத்ரயம் கிம் ?***

***அவஸ்தா-த்ரயம்*** *– மூன்று அவஸ்தைகள் (நிலைகள்)*
***கிம்? -*** *எவை ?*

*ஆத்மாவிற்கு மேல் அக்ஞானத்தினால் உண்டாகும் (கல்பிக்கப்படும்) அவஸ்தாத்ரயம் என்ற மூன்று நிலைகள் எவை?*

**जाग्रत्स्वप्नसुषुप्त्यवस्थाः ।**

***ஜாக்ரத்-ஸ்வப்ன-ஸுஷுப்த்யவஸ்தா: |***

***ஜாக்ரத்*** *– விழிப்பு,* ***ஸ்வப்ன*** *– கனவு,* ***ஸுஷுப்தி*** *– ஆழ்ந்த உறக்கம்* ***அவஸ்தா*** *– நிலைகளாகும்.*

***ஜாக்ரதம்*** *என்ற விழிப்பு நிலை,* ***ஸ்வப்நம்*** *என்ற கனவு நிலை,* ***ஸுஷுப்தி*** *என்ற ஆழ்ந்த உறக்கநிலை என்று அவஸ்தைகள் (நிலைகள்) மூன்றாகும்.*

***<u>ஜாக்ரத அவஸ்தா-விழிப்பு நிலை</u>***

**जाग्रदवस्था का ?**

***ஜாக்ரதவஸ்தா கா?***

*ஜாக்ரதம் என்ற விழிப்பு நிலை என்றால் என்ன?*

**श्रोत्रादिज्ञानेन्द्रियैः शब्दादिविषयान् ज्ञायन्त इति यत् सा जाग्रदवस्था । स्थूलशरीराभिमानी आत्मा विश्व इत्युच्यते ।**

***ச்ரோத்ராதி-ஞானேந்திரியை: சப்தாதி-விஷயான் ஞாயந்த இதி யத் ஸா ஜாக்ரதவஸ்தா / ஸ்தூல-சரீராபிமாநீ ஆத்மா விச்வ இத்யுச்யதே /***

***ச்ரோத்ராதி-ஞானேந்திரியை:***-*காது முதலிய ஞானேந்த்ரி யங்களால்* ***சப்தாதி-விஷயான்*** *- சப்தம் முதலிய விஷயங்களை* ***யத்*** *- எந்த அவஸ்தையில்* ***ஞாயந்த இதி*** *– அறியப்படுகின்றதாக உள்ளதோ* ***ஸா*** *- அந்த அவஸ்தை* ***ஜாக்ரதவஸ்தா*** *- ஜாக்ரத அவஸ்தை* ***ஸ்தூல-சரீராபிமாநீ*** *– ஸ்தூல சரீர அபிமானி* ***ஆத்மா*** *- ஆத்மா* ***விச்வ*** *- விச்வன்* ***இதி-உச்யதே*** *- என்று சொல்லப்படுகின்றது.*

*காது(ச்ரோத்ரம்) முதலிய ஞானேந்த்ரியங்களால் சப்தம் முதலிய விஷயங்கள் எந்த அவஸ்தையில் அறியப் படுகின்றதாக உள்ளதோ அந்த அவஸ்தை ஜாக்ரத அவஸ்தை ஸ்தூல சரீர அபிமானி ஆத்மா விச்வன் என்று சொல்லப்படுகின்றது.*

## ஸ்வப்ன அவஸ்தா- கனவு நிலை

**स्वप्नावस्था केति चेत् ?**

***ஸ்வப்னாவஸ்தா கேதி சேத்?***

*ஸ்வப்ன அவஸ்தை என்றால் என்ன?*

**जाग्रदवस्थायां यद्दृष्टं यच्छ्रुतं तज्जनितवासनया निद्रासमये यः प्रपञ्चः प्रतीयते सा स्वप्नावस्था । सूक्ष्मशरीराभिमानी आत्मा तैजस इत्युच्यते ।**

***ஜாக்ரதவஸ்தாயாம் யத்த்ருஷ்டம் யச்ச்ருதம் தஜ்ஜநிதவாஸனயா நித்ராஸமயே ய: ப்ரபஞ்ச: ப்ரதீயதே ஸா ஸ்வப்னாவஸ்தா / ஸூக்ஷ்சரீராபிமாநீ ஆத்மா தைஜஸ இத்யுச்யதே /***

***ஜாக்ரத-அவஸ்தாயாம்*** *- விழிப்பு நிலையில்* ***யத்*** *- எது* ***த்ருஷ்டம்-*** *பார்க்கப்பட்டதோ* ***யத்*** *- எது* ***ச்ருதம்*** *- கேட்கப்பட்டதோ* ***தத்*** *- அதிலிருந்து* ***ஜநிதவாஸனயா*** *- உண்டான வாஸனையினால் (பதிவி னால்)* ***நித்ராஸமயே*** *–தூங்குகின்ற சமயத்தில்* ***ய:*** *- எந்த* ***ப்ரபஞ்ச:-*** *ப்ரபஞ்ச மானது (உலகமானது)* ***ப்ரதீயதே–*** *தோன்றுகின்றதோ* ***ஸா-*** *அது* ***ஸ்வப்னாவஸ்தா*** *- ஸ்வப்ன அவஸ்தை என்ற கனவு நிலை* ***ஸூக்ஷ்சரீராபிமாநீ*** *– ஸூக்ஷ்ம சரீரத்தில் அபிமானத்தை கொண்ட* ***ஆத்மா*** *– ஆத்மா* ***தைஜஸ*** *– தைஜஸன்* ***இதி*** *- என்று* ***உச்யதே–*** *சொல்லப்படுகின்றது.*

*ஜாக்ரத-அவஸ்தா என்ற விழிப்பு நிலையில் எது பார்க்கப் பட்டதோ எது கேட்கப்பட்டதோ, (அது அனுபவிக்கப் பட்டதோ) அதிலிருந்து உண்டான வாஸனையினால் (பதிவினால்) தூங்குகின்ற சமயத்தில் எந்த ப்ரபஞ்சமா னது (உலகமானது) தோன்றுகின்றதோ அது ஸ்வப்ன அவஸ்தை என்ற கனவு நிலையாகும். அந்த கனவு நிலையில் உள்ள ஸூக்ஷ்ம சரீரத்தில் அபிமானத்தை கொண்ட ஆத்மாவிற்கு தைஜஸன் என்று பெயராக சொல்லப்படுகின்றது.*

## *ஸுஷுப்தி-அவஸ்தா- ஆழ்ந்த உறக்க நிலை*

**अत: सुषुप्त्यवस्था का ?**

***அத: ஸுஷுப்த்யவஸ்தா கா?***

***அத:*** *- பிறகு,* ***ஸுஷுப்தி அவஸ்தா*** *– உறக்கநிலை* ***கா?*** *- என்றால் என்ன?*

*பிறகு, ஸுஷுப்தி அவஸ்தை என்ற ஆழ்ந்த உறக்க நிலை என்றால் என்ன?*

**अहं किमपि न जानामि सुखेन मया निद्राऽनुभूयत इति सुषुप्त्यवस्था ।**

***அஹம் கிமபி ந ஜானாமி ஸுகேன மயா நித்ரா(அ)னுபூயத இதி ஸுஷுப்த்யவஸ்தா |***

***அஹம்*** *- நான்* ***கிமபி*** *– எந்த ஒன்றையும் எதனையும்* ***ந ஜானாமி*** *-அறியவில்லை* ***ஸுகேன*** *-சுகமாக* ***மயா*** *- என்னால்* ***நித்ரா*** *- தூக்கமானது* ***(அ)னுபூயத*** *- அனுபவிக்கப்பட்டது* ***இதி*** *- என்ற இது* ***ஸுஷுப்த்ய வஸ்தா*** *- ஸுஷுப்தி அவஸ்தை என்ற ஆழந்த உறக்க நிலையாகும்.*

*நான் எந்த ஒன்றையும் (எதனையும்) அறியவில்லை. சுகமாக என்னால் தூக்கமானது அனுபவிக்கப்பட்டது என்ற இது ஸுஷுப்தி அவஸ்தை என்ற ஆழந்த உறக்க நிலையாகும்.*

**कारणशरीराभिमानी आत्मा प्राज्ञ इत्युच्यते ।**

***காரணசரீராபிமாநீ ஆத்மா ப்ராக்ஞ இத்யுச்யதே /***

***காரண-சரீர-அபிமாநீ*** *– காரணசரீரத்தில் அபிமானத்தை உடைய* ***ஆத்மா****- ஆத்மாவிற்கு* ***ப்ராக்ஞ*** *- ப்ராக்ஞன்* ***இதி-உச்யதே*** *- என்று சொல்லப்படுகின்றது.*

*ஆழ்ந்த உறக்க நிலையில் உள்ள காரண சரீரத்தில் அபிமானத்தை உடைய ஆத்மாவிற்கு ப்ராக்ஞன் என்று பெயர் சொல்லப்படுகின்றது.*

-------------------------

## <u>பஞ்சகோசங்கள்</u>

**(ஆத்மாவை மறைத்திருக்கின்ற ஐந்து உறைகள்)**

**पञ्चकोशा: के ?**

***பஞ்சகோசா: கே ?***

***பஞ்சகோசா: -*** *ஐந்து கோசங்கள்* ***க?-*** *என்றால் எவை?*

**अन्नमयो प्राणमयो मनोमयोविज्ञानमयो आनन्दमयश्चेति ।**

***அன்னமயோ-ப்ராணமயோ- மனோமயோ-விக்ஞான மயோ ஆநந்தமயஸ்சேதி.***

***அன்னமய:-*** *அன்னத்தின் பரிணாமம் (மாறுபாடு)* ***ப்ராணமய: -*** *ப்ராணனின் பரிணாமம் (மாறுபாடு)* ***மனோமய:-*** *மனதின் பரிணாமம் (மாறுபாடு)* ***விக்ஞானமய:-*** *விக்ஞானம் என்ற புத்தியின் பரிணாமம் (மாறுபாடு)* ***ஆநந்தமய: -*** *ஆனந்தத்தின் பரிணாமம் (மாறுபாடு)* ***ச-இதி-*** *என்ற இவைகள்.*

*1.அன்னத்தின் பரிணாமம் (மாறுபாடு) என்ற அன்னமயம், 2.ப்ராணனின் பரிணாமம் (மாறுபாடு) என்ற ப்ராணமயம், 3.மனதின் பரிணாமம் (மாறுபாடு) என்ற மனோமயம், 4.விக்ஞானம் என்ற புத்தியின் பரிணாமம் (மாறுபாடு) என்ற விக்ஞானமயம், 5.ஆனந்தத்தின் பரிணாமம் (மாறுபாடு) என்ற ஆனந்தமயம் என்ற இவைகள் ஐந்தும் பஞ்சகோசங்கள் எனப்படும்.*

### <u>1.அன்னமயம்</u>

**अन्नमय: क: ?**

***அன்னமய: க: ?***

***அன்னமய: -*** *அன்னமயம்* ***க:?*** *– என்றால் என்ன?*

**अन्नरसेनैव भूत्वा अन्नरसेनैव वृद्धिं प्राप्य अन्नरूपपृथिव्यां यद्विलीयते तदन्नमय: कोश: स्थूलशरीरम् ।**

***அன்னரஸேனைவ பூத்வா அன்னரஸேனைவ வ்ருத்திம் ப்ராப்ய அன்னரூபப்ருதிவ்யாம் யத்விலீயதே ததன்னமய: கோச: ஸ்தூலசரீரம் |***

***அன்னரஸேனைவ*** – *உணவின் சாற்றினாலேயே* ***பூத்வா*** – *உண்டானதாக,* ***அன்னரஸேனைவ -*** *உணவின் சாற்றினாலேயே* ***வ்ருத்திம்-ப்ராப்ய*** – *வளர்ச்சியை அடைந்து* ***அன்னரூப*** – *உணவின் வடிவான* ***ப்ருதிவ்யாம்-*** *பூமியில்* ***யத்-விலீயதே*** – *எது ஒடுக்கத்தை அடைகின்றதோ,* ***தத்-அன்னமய: கோச: -*** *அது அன்னமய கோசம்.* ***ஸ்தூலசரீரம்*** *– ஸ்தூல சரீரம் (பரு உடல்)*

*உணவின் சாற்றிலிருந்தே அதாவது வீர்யத்திலிருந்து (விந்துவிலிருந்து) உண்டானதாகவும், உணவின் சாற்றினாலேயே வளர்ச்சியை அடைந்து, உணவின் வடிவான பூமியில் எது ஒடுக்கத்தை அடைகின்றதோ, அது அன்னமய கோசமாகும். அதாவது அன்னமயகோசம் என்பது ஸ்தூல சரீரம் என்ற பரு உடலாகும்.*

--------------------

## *2.ப்ராணமயம்*

**प्राणमय: क: ?**

***ப்ராணமய: க: ?***

***ப்ராணமய: -****ப்ராணமயம்* ***க:-*** *என்றால் என்ன?*

*ப்ராணமய கோசம் என்றால் என்ன?*

**प्राणाद्या: पञ्चवायव: वागादीन्द्रियपञ्चकं प्राणमय: कोश: ।**

***ப்ராணாத்யா: பஞ்சவாயவ: வாகாதீந்திரியபஞ்சகம் ப்ராணமய:கோச: |***

***ப்ராணாத்யா: -*** *ப்ராணன் முதலிய* ***பஞ்சவாயவ: -*** *ஐந்து வாயுக்கள்* ***வாகாதீந்திரியபஞ்சகம்*** *– வாக் முதலிய ஐந்து கர்மேந்த்ரியங்கள்* ***ப்ராணமய:கோச:*** *ப்ராணமய கோசமாகும்.*

*ப்ராணன் முதலிய ஐந்து வாயுக்கள் மற்றும் வாக் முதலிய ஐந்து கர்மேந்த்ரியங்கள் சேர்ந்தது ப்ராணமய கோசமாகும்.*

-----------------------

**3.மனோமயம்**

**मनोमय: क: ?**

***மனோமய: க: ?***

***மனோமய: -*** *மனோமயம்* ***க:?*** *– என்றால் என்ன?*

*மனோமய கோசம் என்றால் என்ன?*

**मनश्च ज्ञानेन्द्रियपञ्चकं मिलित्वा यो भवति स मनोमय: कोश: ।**

***மனஸ்ச ஞானேந்திரியபஞ்சகம் மிலித்வா யோ பவதி ஸ மனோமய: கோச: ।***

***மனஸ்-ச -*** *மனமும்* ***ஞானேந்திரிய-பஞ்சகம்*** *– ஐந்து ஞானேந்த்ரியங்களும்* ***மிலித்வா*** *– கூடியதாக-சேர்ந்ததாக* ***யோ -*** *எது* ***பவதி -*** *இருக்கின்றதோ* ***ஸ*** *– அது* ***மனோமய: கோச: -*** *மனோமய கோசம்.*

*மனமும் மற்றும் ஐந்து ஞானேந்த்ரியங்களும் கூடியதாக-சேர்ந்ததாக எது இருக்கின்றதோ அது மனோமய கோசம் ஆகும்.*

--------------------

**4.விக்ஞானமயம்**

**विज्ञानमय: क: ?**

***விக்ஞானமய: க: ?***

***விக்ஞானமய: -*** *விக்ஞானமய கோசம்* ***க:?-*** *என்றால் என்ன?*

*விக்ஞானமய கோசம் என்றால் என்ன?*

**बुद्धिज्ञानेन्द्रियपञ्चकं मिलित्वा यो भवति स विज्ञानमय: कोश: ।**

***புத்திஞானேந்திரியபஞ்சகம் மிலித்வா யோ பவதி ஸ விக்ஞானமய: கோச:|***

***புத்தி-ஞானேந்திரிய-பஞ்சகம்*** – *புத்தியும் ஐந்து ஞானேந்த்ரியங்களும்* ***மிலித்வா*** *– சேர்ந்ததாக -கூடியதாக* ***யோ*** *- எது* ***பவதி*** *- இருக்கின்றதோ* ***ஸ*** *- அது* ***விக்ஞானமய: கோச:*** *விக்ஞானமய கோசம்.*

*புத்தியும் அதனோடு ஐந்து ஞானேந்த்ரியங்களும் சேர்ந்ததாக-கூடியதாக எது இருக்கின்றதோ அது விக்ஞானமய கோசம் ஆகும்.*

------------------

**5.ஆனந்தமயம்**

**आनन्दमय: क: ?**

***ஆனந்தமய: க: ?***

***ஆனந்தமய:*** *-ஆனந்தமய கோசம்* ***க:?*** *– என்றால் என்ன?*

*ஆனந்தமய கோசம் என்றால் என்ன?*

**एवमेव कारणशरीरभूताविद्यास्थमलिनसत्वं प्रियादिवृत्तिसहितं सत् आनन्दमय: कोश: ।**

***ஏவமேவ காரணசரீரபூதாவித்யாஸ்த-மலினஸத்வம் ப்ரியாதி-வ்ருத்தி ஸஹிதம் ஸத் ஆனந்தமய: கோச: |***

***ஏவமேவ*** *- இவ்விதமாகவே* ***காரணசரீரபூத-அவித்யாஸ்த-மலின ஸத்வம்*** *– காரணசரீர வடிவான அவித்யாவில் இருக்கின்ற அழுக்கடைந்த ஸத்வகுணம்* ***ப்ரியாதி-வ்ருத்தி*** *– பிரியம் முதலிய எண்ணங்களோடு* ***ஸஹிதம்*** *– கூடியதாக* ***ஸத்*** *– இருப்பது* ***ஆனந்தமய: கோச:*** *ஆனந்தமய கோசம்.*

*இவ்விதமாகவே காரணசரீர வடிவான அவித்யாவில் நிற்கின்ற- இருக்கின்ற அழுக்கடைந்த (மலின) ஸத்வ குணமானது, பிரியம் முதலிய எண்ணங்களோடு கூடியதாக இருப்பது ஆனந்தமய கோசம் ஆகும்.*

**एतत्कोशपञ्चकम् ।**

***ஏதத்கோசபஞ்சகம் |***

***ஏதத்கோசபஞ்சகம்*** *– இது கோச பஞ்சகம்*

*மேலே சொல்லப்பட்ட இவைகளே கோச பஞ்சகம் என்ற ஐந்து கோசங்களாகும்.*

**---------------**

***<u>பஞ்சகோசங்கள் ஆத்ம இல்லை</u>***

**मदीयं शरीरं मदीयाः प्राणाः मदीयं मनश्च मदीया बुद्धिर्मदीयं अज्ञानमिति स्वेनैव ज्ञायते तद्यथा मदीयत्वेन ज्ञातं कटककुण्डलगृहादिकं स्वस्माद्भिन्नं तथा पञ्चकोशादिकं मदीयत्वेन ज्ञातमात्मा न भवति ।**

***மதீயம் சரீரம் மதீயா: ப்ராணா: மதீயம் மனஸ்ச மதீயா புத்திர்மதீயம் அக்ஞானமிதி ஸ்வேனைவ ஞாயதே தத்யதா மதீயத்வேன ஞாதம் கடக-குண்டல-க்ருஹாதி -கம் ஸ்வஸ்மாத்பின்னம் ததா பஞ்சகோசாதிகம் மதீயத்வேன ஞாதமாத்மா ந பவதி |***

***மதீயம் -*** *என்னுடைய* ***சரீரம் -*** *உடல்* ***மதீயா: -*** *என்னுடைய* ***ப்ராணா: -*** *ப்ராணன்* ***மதீயம் -*** *என்னுடைய* ***மனஸ்ச -*** *மனம்* ***மதீயா -*** *என்னுடைய* ***புத்திர்-*** *புத்தி* ***மதீயம் -*** *என்னுடைய* ***அக்ஞானமிதி*** *– அக்ஞானம் என்று* ***ஸ்வேனைவ -*** *தன்னாலேயே* ***ஞாயதே -*** *அறியப்படுகிறது* ***தத்யதா*** *– அது எவ்வாறெனில்* ***மதீயத்வேன ஞாதம்*** *– என்னால் அறியப் படுவதாக உள்ள* ***கடக-குண்டலக்ருஹாதிகம்****– வளையள்-குண்டலம் (கம்மல்)- வீடு முதலிய*

***ஸ்வஸ்மாத்பின்னம்*** – *தன்னிலிருந்து வேறானதாக உள்ளதோ* ***ததா -*** *அவ்விதமாகவே* ***பஞ்சகோசாதிகம்*** *– பஞ்ச கோசங்களும்* ***மதீயத்வேன -*** *என்னுடையதாக* ***ஞாதம்*** *– அறியப்படுவதாக உள்ளதால்* ***ஆத்மா*** *– ஆத்மாவாக* ***ந பவதி*** *– இருக்க முடியாது.*

*என்னுடைய உடல், என்னுடைய ப்ராணன், என்னுடைய மனம், என்னுடைய புத்தி, என்னுடைய அக்ஞானம் என்ற இவை தன்னாலேயே என்னால் அறியப்படுவதாக இருக்கின்றன. எவ்வாறு, என்னால் அறியப்படுவதாக உள்ள வளையள்-குண்டலம் (கம்மல்)- வீடு முதலிய தன்னிலிருந்து - என்னிலிருந்து வேறானதாக உள்ளதோ, அவ்விதமாகவே பஞ்ச கோசங்களும் என்னுடையதாக என்னால் அறியப்படுவதாக உள்ளதால், அந்த பஞ்ச கோசங்கள் ஆத்மாவாக இருக்க முடியாது. (பார்க்கப் படுவதாக உள்ள object ஆன விஷயங்கள் எக்காலத்திலும் subject ஆகிய நானாக ஆகமுடியாது.*

-------------------------

## <u>ஆத்மாவின் ஸ்வரூப லக்ஷணம்</u>

**आत्मा तर्हि कः?**

***ஆத்மா தர்ஹி க:?***

***தர்ஹி*** *– அவ்வாறாகில்,* ***ஆத்மா*** *– ஆத்மா(நான்)* ***க? -*** *யார்*

*அவ்வாறாகில், ஆத்மா (நான்) யார் ? (ஆத்மா என்றால் என்ன?)*

**सच्चिदानन्दस्वरूपः ।**

***ஸச்சிதாநந்தஸ்வரூப: |***

***ஸச்சிதானந்த*** *– ஸத்-சித்-ஆனந்த* ***ஸ்வருப: -*** *ஸ்வரூபம்*

*ஸத்-சித்-ஆனந்தத்தையே ஸ்வரூபமாக–இயல்பாக கொண்டவன்.*

*ஸத், சித், ஆனந்த வடிவானவன் நான்.*

**सत् किम् ?**

***ஸத் கிம்?***

***ஸத்*** *– ஸத்* ***கிம்?*** *– என்றால் என்ன?*

*ஸத் என்றால் என்ன?*

**कालत्रयेऽपि तिष्ठतीति सत् ।**

***காலத்ரயே(அ)பி திஷ்டதீதி ஸத் |***

***காலத்ரயே(அ)பி*** *–மூன்று காலங்களிலும் கூட* ***திஷ்டதி-இதி–*** *இருப்பது* ***ஸத்-*** *ஸத்*

*மூன்று காலங்களிலும் இருப்பது எதுவோ அது ஸத் ஆகும். தூய (வெறும்)இருப்பே ஸத் ஆகும்.*

**चित् किम् ?**

***சித் கிம்?***

***சித்*** *– ஸத்* ***கிம்?*** *– என்றால் என்ன?*
*சித் என்றால் என்ன?*

**ज्ञानस्वरूपः ।**

***ஞானஸ்வரூப: /***

***ஞானஸ்வரூப: -*** *ஞான வடிவானது*

*அறிவே வடிவானது ஞானஸ்வரூபம் ஆகும்.*
*தூய (வெறும்)அறிவே சித் ஆகும்.*

**आनन्दः कः ?**

***ஆனந்த: க: ?***

***ஆனந்த:*** *– ஆனந்தம்* ***க:?*** *– என்றால் என்ன?*

*ஆனந்தம் என்றால் என்ன?*

**सुखस्वरूपः ।**

***ஸுகஸ்வரூப: /***

***ஸுகஸ்வரூப: -*** *சுக வடிவானது*

*சுக வடிவானது ஆனந்தம் ஆகும்.*

*விஷய கலப்பில்லாத தூய (வெறும்) சுகமே ஆனந்தம் ஆகும்.*

**एवं सच्चिदानन्दस्वरूपं स्वात्मानं विजानीयात् ।**

***ஏவம் ஸச்சிதானந்தஸ்வரூபம் ஸ்வாத்மானம் விஜாநீயாத் /***

***ஏவம்*** *- இவ்விதமாக* ***ஸச்சிதானந்தஸ்வரூபம்*** *– ஸச்சிதானந்த ஸ்வரூபமாக* ***ஸ்வாத்மானம்*** *– தன் ஆத்மாவை (தன்னை)* ***விஜாநீயாத்*** *– அறிய வேண்டும்.*

*இவ்விதமாக ஸச்சிதானந்த ஸ்வரூபமாக உள்ளதாக தன் ஆத்மாவை அதாவது தன்னை அறிய வேண்டும்.*

---------------------------

**ஸ்ருஷ்டி க்ரமம் – ஸ்ருஷ்டி உண்டாகும் முறை**

**இருபத்தி நான்கு தத்துவங்களின் உத்பத்தி க்ரமம்**

**अथ चतुर्विंशतितत्त्वोपत्तिप्रकार: वक्ष्याम: ।**

***அத சதுர்விம்சதி-தத்த்வோபத்திப்ரகார: வக்ஷ்யாம: |***

***அத*** - *பிறகு (இப்பொழுது)* ***சதுர்விம்சதி*** – *இருபத்தி நான்கு* ***தத்த்வ-உபத்திப்ரகார:*** *தத்துவங்களின் உத்பத்தி முறை* ***வக்ஷ்யாம:*** *சொல்லப் போகின்றோம்.*

*பிறகு, இனி இருபத்தி நான்கு தத்துவங்களின் உத்பத்தி முறையை குறித்து சொல்லப் போகின்றோம்.*

---------------------

**மாயா தத்துவம்**

**ब्रह्माश्रया सत्वरजस्तमोगुणात्मिका माया अस्ति ।**

***ப்ரஹ்மாஸ்ரயா ஸத்வ-ரஜஸ்-தமோ-குணாத்மிகா மாயா அஸ்தி |***

***ப்ரஹ்ம-ஆஸ்ரயா*** - *ப்ரஹ்மத்தை சார்ந்ததாக* ***ஸத்வ-ரஜஸ்-தமோகுண-ஆத்மிகா***– *ஸத்வம், ரஜஸ், தமஸ் என்ற மூன்று குணங்கள் வடிவான* ***மாயா*** - *மாயாவானது*

***அஸ்தி*** - *இருக்கின்றது.*

*ப்ரஹ்மத்தை சார்ந்ததாக ஸத்வம், ரஜஸ், தமஸ் என்ற மூன்று குணங்களை வடிவாமாக் கொண்ட மாயாவானது (மாயா சக்தியானது) இருக்கின்றது.*

--------------------

**ततः आकाशः संभूतः ।**

***தத: ஆகாச: ஸம்பூத: |***

***தத:*** - *அதிலிருந்து* ***ஆகாச:*** - *ஆகாசமானது* ***ஸம்பூத:*** - *உண்டாயிற்று.*

*அதிலிருந்து (மாயா தத்துவத்திலிருந்து) ஆகாசமானது உண்டாயிற்று.*

**आकाशात् वायुः ।**

***ஆகாசாத் வாயு: /***

***ஆகாசாத் -*** *ஆகாசத்திலிருந்து* ***வாயு: -*** *வாயு.*

*ஆகாசத்திலிருந்து வாயுவானது உண்டாயிற்று.*

**वायोस्तेजः ।**

***வாயோஸ்தேஜ: /***

***வாயோ:*** *- வாயுவிலிருந்து* ***தேஜ: -*** *அக்னி.*

*வாயுவிலிருந்து அக்னியானது உண்டாயிற்று.*

**तेजस आपः ।**

***தேஜஸ ஆப: /***

***தேஜஸ:*** *- வாயுவிலிருந்து* ***ஆப:*** *- அக்னி.*

*அக்னிலிருந்து ஜலமானது உண்டாயிற்று.*

**अद्भ्यः पृथिवी ।**

***அத்ப்ய: ப்ருதிவீ /***

***அத்ப்ய:*** *- ஜலத்திலிருந்து* ***ப்ருதிவீ*** *– பூமி.*

*ஜலத்திலிருந்து பூமி தத்துவமானது உண்டாயிற்று.*

--------------------

***<u>ப்ரஹ்மம்</u>***

↓

***மாயா***

***(ப்ரஹ்மத்தின் நிழல் போன்றது- ஸத்வ-ரஜஸ்-தமோ குணம் என்ற முக்குண வடிவானது)***

↓

***1.ஆகாஸம்***

↓

***2.வாயு:***

↓

***3.அக்னி:***

↓

***4.ஜலம்***

↓

***5.ப்ருதிவி***

<u>ஞானேந்த்ரியங்களின் உத்பத்தி</u>

**एतेषां पञ्चतत्त्वानां मध्ये आकाशस्य सात्त्विकांशात् श्रोत्रेन्द्रियं सम्भूतम् ।**

***ஏதேஷாம் பஞ்சதத்வானாம் மத்யே ஆகாசஸ்ய ஸாத்விகாம்சாத் ச்ரோத்ரேந்த்ரியம் ஸம்பூதம் |***

***ஏதேஷாம்*** – *இந்த* ***பஞ்சதத்த்வானாம்*** – *ஐந்து தத்துவங்களின்* ***மத்யே*** – *மத்தியில்* ***ஆகாசஸ்ய*** – *ஆகாசத்தின்* ***ஸாத்விகாம்சாத்*** – *ஸாத்விக அம்ஸத்திலிருந்து* ***ச்ரோத்ரேந்த்ரியம்*** *–ச்ரோத்ரம் (செவி) என்ற புலன்* ***ஸம்பூதம்*** *– உண்டாயிற்று.*

*இந்த ஐந்து தத்துவங்களின் மத்தியில் ஆகாசத்தினுடைய ஸாத்விக அம்ஸத்திலிருந்து ச்ரோத்ர இந்திரியம் (செவி என்ற புலன்) உண்டாயிற்று.*

**वायोः सात्त्विकांशात् त्वगिन्द्रियं सम्भूतम् ।**

***வாயோ: ஸாத்த்விகாம்சாத் த்வகிந்த்ரியம் ஸம்பூதம் |***

***வாயோ:*** - *வாயுவின்* ***ஸாத்த்விகாம்சாத்*** - *ஸாத்விக அம்ஸத்திலிருந்து* ***த்வகிந்த்ரியம்*** - *த்வக் இந்திரியம்* ***ஸம்பூதம்*** - *உண்டாயிற்று.*

*வாயுவினுடைய ஸாத்விக அம்ஸத்திலிருந்து த்வக் இந்திரியம் (தொடு உணர்சியை அறிகின்ற தோல் என்ற புலன்) உண்டாயிற்று.*

**अग्नेः सात्त्विकांशात् चक्षुरिन्द्रियं सम्भूतम्।**

***அக்னே: ஸாத்விகாம்சாத் சக்ஷுரிந்திரியம் ஸம்பூதம் |***

***அக்னே:*** - *வாயுவின்* ***ஸாத்விகாம்சாத்*** - *ஸாத்விக அம்ஸத்திலிருந்து* ***சக்ஷுரிந்த்ரியம்*** – *சக்ஷு: இந்திரியம்* ***ஸம்பூதம்*** - *உண்டாயிற்று.*

*அக்னியினுடைய ஸாத்விக அம்ஸத்திலிருந்து சக்ஷு: இந்திரியம் (கண்கள் என்ற புலன்) உண்டாயிற்று.*

**जलस्य सात्त्विकांशात् रसेन्द्रियं सम्भूतम् ।**

***ஜலஸ்ய ஸாத்த்விகாம்சாத் ரஸேந்த்ரியம் ஸம்பூதம் /***

***ஜலஸ்ய*** - *ஜலத்தின்* ***ஸாத்த்விகாம்சாத்*** - *ஸாத்விக அம்ஸத்திலிருந்து* ***ரஸேந்த்ரியம்*** – *நாக்கு இந்திரியம்* ***ஸம்பூதம்*** - *உண்டாயிற்று.*

*ஜலத்தினுடைய ஸாத்விக அம்ஸத்திலிருந்து ரஸ இந்திரியம் (நாக்கு என்ற புலன்) உண்டாயிற்று.*

**पृथिव्याः सात्त्विकांशात् घ्राणेन्द्रियं सम्भूतम् ।**

***ப்ருதிவ்யா: ஸாத்த்விகாம்சாத் க்ராணேந்த்ரியம் ஸம்பூதம் /***

***ப்ருதிவ்யா:*** - *பூமியின்* ***ஸாத்த்விகாம்சாத்*** - *ஸாத்விக அம்ஸத்திலிருந்து* ***க்ரானேத்ரியம்*** – *மூக்கு (நாசி) இந்திரியம்* ***ஸம்பூதம்*** - *உண்டாயிற்று.*

*ப்ருதிவியினுடைய ஸாத்விக அம்ஸத்திலிருந்து க்ராண இந்திரியம் (மூக்கு- நாசி என்ற புலன்) உண்டாயிற்று.*

---------------------------

***ஞானேந்த்ரியங்களின் உத்பத்தி***

| | தத்துவம் | குணம் | இந்திரியம் |
|---|---|---|---|
| 1 | ஆகாசம் | ஸாத்விகம் | ச்ரோத்ர இந்த்ரியம் (காதுகள்) |
| 2 | வாயு | ஸாத்விகம் | ஸ்பர்ச இந்திரியம் (தோல்) |
| 3 | அக்னி | ஸாத்விகம் | சக்ஷு இந்திரியம் (கண்கள்) |
| 4 | ஜலம் | ஸாத்விகம் | ரசண இந்திரியம் (நாக்கு) |
| 5 | ப்ருதிவீ | ஸாத்விகம் | க்ராண இந்திரியம் (மூக்கு) |

## *அந்த:கரணங்களின் உத்பத்தி*

**एतेषां पञ्चतत्त्वानां समष्टिसात्त्विकांशात् मनोबुद्ध्यहंकार चित्तान्त:करणानि संभूतानि ।**

***ஏதேஷாம் பஞ்சதத்த்வானாம் ஸமஷ்டி-ஸாத்த்விகாம்சாத் மனோபுத்த்யஹங்கார சித்தாந்த:கரணானி ஸம்பூதாநி |***

***ஏதேஷாம்*** – *இந்த* ***பஞ்சதத்த்வானாம்*** – *ஐந்து தத்துவங்களின்* ***ஸமஷ்டி-*** *மொத்த-முழுமையான (total) தத்துவங்களின்* ***ஸாத்த்விகாம்சாத்*** *– ஸத்வ குணங்களின் அம்சத்திலிருந்து* ***மனோ-புத்தி-அஹங்கார*** *– மனம்-புத்தி-அஹங்காரம்* ***சித்தாந்த:கரணானி*** *– சித்தம் முதலான அந்தஃகரணங்கள்* ***ஸம்பூதம்*** *– உண்டாயிற்று.*

*இந்த ஐந்து தத்துவங்களின் முழுமையான - மொத்த (total) தத்துவங்களின் ஸத்வ குணங்களின் அம்சத்திலிருந்து மனம் – புத்தி -அஹங்காரம் - சித்தம் (முதலிய) அந்தக்கரணங்கள் உண்டாயின. அந்தக்கரணம் என்பது தேஹத்திற்கு உள்ளிருக்கின்ற கருவிகளாகும். நான்கு விதமான காரியங்களைச் செய்கின்ற எண்ணங்களுக்கே நான்கு விதமாக பெயர்களால் சொல்லப்படுகின்றது.*

---------------------------------------

## *2.மனம்*

**संकल्पविकल्पात्मकं मन: ।**

***ஸங்கல்பவிகல்பாத்மகம் மன: |***

***ஸங்கல்பவிகல்பாத்மகம்*** *– ஸங்கல்ப-விகல்ப வடிவானது* ***மன: -****மனம்.*

*நிச்சயமான தன்மை (சங்கல்பம்) - நிச்சயமற்ற சந்தேகத்தோடு கூடிய தன்மை (விகல்பம்) என்ற இரு கூறுகளையும் ஒருங்கே கொண்ட எண்ணங்கள் மனம் என்று சொல்லப்படுகின்றன.*

--------------------------------

***2.புத்தி***

**निश्चयात्मिका बुद्धिः ।**

***நிஸ்சயாத்மிகா புத்தி: |***

***நிஸ்சயாத்மிகா -*** *நிச்சயமான வடிவானது* ***புத்தி: -*** *புத்தி.*

*நிச்சயமான தன்மையை கொண்ட எண்ணங்கள் புத்தி என்று சொல்லப்படுகின்றன.*

-------------------------

***3.அஹங்காரம்***

**अहंकर्ता अहंकारः ।**

***அஹங்கர்த்தா அஹங்கார: |***

***அஹங்கர்த்தா -*** *நான் செயலை செய்கின்ற கர்த்தா என்ற எண்ணம்* ***அஹங்கார: -*** *அஹங்காரம் ஆகும்.*

***'நான் செயலை செய்கின்ற கர்த்தா'*** *என்ற ஆதாரமான எண்ணத்திற்கு* ***அஹங்காரம்*** *என்று பெயர் ஆகும்.*

-------------------------

***4.சித்தம்***

**चिन्तनकर्तृ चित्तम् ।**

***சிந்தனகர்த்ரு சித்தம் |***

***சிந்தனகர்த்ரு -*** *சிந்தனை செய்வது* ***சித்தம் -*** *சித்தம்.*

*சிந்தனை செய்கின்ற ஆற்றல் உடையது சித்தம் ஆகும்.*
*நினைவுகளை சேமிப்பதும் இந்த சித்தமே ஆகும்.*
*முன் நடந்த நிகழ்ச்சிகளை நினைவில் கொண்டே சிந்தனையானது செய்யப்படுகின்றது.*

-------------------

## *அந்த:கரணத்தின் அதிஷ்டான-அபிமான தேவதைகள்*

**मनसो देवता चन्द्रमा ।**

***மனஸோ தேவதா சந்த்ரமா /***

***மனஸோ*** *- மனதிற்கு* ***தேவதா*** *- தேவதை* ***சந்த்ரமா*** *- சந்திரன்*

*மனதிற்கான அதிஷ்டான - ஆதாரமான தேவதை சந்திரனாகும்.*

------------------------

**बुद्धेर्ब्रह्मा ।**

***புத்தேர்ப்ரஹ்மா /***

***புத்தேர்*** *- புத்திக்கு* ***ப்ரஹ்மா*** *- ப்ரஹ்மா*

*புத்திக்கு அதிஷ்டான-ஆதாரமான தேவதை (சதுர்முக) ப்ரஹ்மா ஆவார்.*

------------------------

**अहंकारस्य रुद्रः ।**

***அஹங்காரஸ்ய ருத்ர: /***

***அஹங்காரஸ்ய*** *- அஹங்காரத்திற்கு தேவதை* ***ருத்ர:*** *- ருத்திரன்*

*அஹங்காரத்திற்கு அதிஷ்டான-ஆதாரமான தேவதை ருத்திரன் ஆவார்.*

------------------------

**चित्तस्य वासुदेवः ।**

***சித்தஸ்ய வாசுதேவ: /***

***சித்தஸ்ய*** *- சித்தத்திற்கு தேவதை* ***வாஸுதேவ:*** *- வாஸுதேவன்*

*சித்தத்திற்கு அதிஷ்டான-ஆதாரமான தேவதை வாஸுதேவன் ஆவார்.*

---------------------

***ஞானேந்திரியங்களின் விஷயம் முடிந்தது***

---

<u>***கர்மேந்த்ரியங்களின் உத்பத்தி***</u>

**एतेषां पञ्चतत्त्वानां मध्ये आकाशस्य राजसांशात्वागिन्द्रियं सम्भूतम् ।**

***ஏதேஷாம் பஞ்சதத்த்வானாம் மத்யே ஆகாசஸ்ய ராஜஸாம்சாத்வாகிந்த்ரியம் ஸம்பூதம் |***

***ஏதேஷாம்*** – *இந்த* ***பஞ்சதத்த்வானாம்*** – *ஐந்து தத்துவங்களின்* ***மத்யே*** – *மத்தியில்* ***ஆகாஸஸ்ய*** – *ஆகாசத்தினுடைய* ***ராஜஸாம்சாத்*** *- ராஜஸ அம்ஸத்திலிருந்து* ***வாக்-இந்த்ரியம்*** – *வாக் இந்திரியம்,* ***ஸம்பூதம்*** – *உண்டாயிற்று.*

*இந்த ஐந்து தத்துவங்களின் மத்தியில் ஆகாசத்தினுடைய ராஜஸ அம்ஸத்திலிருந்து வாக் இந்திரியம் உண்டாயிற்று.*

--------------------------

**वायोः राजसांशात् पाणीन्द्रियं सम्भूतम् ।**

***வாயோ: ராஜஸாம்சாத் பாணீந்த்ரியம் ஸம்பூதம் |***

***வாயோ:*** – *வாயுவினுடைய* ***ராஜஸாம்சாத்*** *- ராஜஸ அம்ஸத்திலிருந்து* ***பாணீ-இந்த்ரியம்*** – *கைகள் என்ற இந்திரியம்,* ***ஸம்பூதம்*** – *உண்டாயிற்று.*

*வாயுவினுடைய ராஜஸ அம்ஸத்திலிருந்து கைகள் என்ற இந்திரியம் உண்டாயிற்று.*

---------------------------

**वह्नेः राजसांशात् पादेन्द्रियं सम्भूतम् ।**

***வஹ்னே: ராஜஸாம்சாத் பாதேந்த்ரியம் ஸம்பூதம் |***

***வஹ்னே:*** – *அக்னியினுடைய* ***ராஜஸாம்சாத்*** *- ராஜஸ அம்ஸத்திலிருந்து* ***பாத-இந்த்ரியம்*** – *கால்கள் என்ற இந்திரியம்,* ***ஸம்பூதம்*** – *உண்டாயிற்று.*

*அக்னியினுடைய ராஜஸ அம்ஸத்திலிருந்து கால்கள் என்ற இந்திரியம் உண்டாயிற்று.*

**जलस्य राजासांशात् उपस्थेन्द्रियं सम्भूतम् ।**

***ஜலஸ்ய ராஜாஸாம்சாத் உபஸ்தேந்த்ரியம் ஸம்பூதம் |***

***ஜலஸ்ய*** – *ஜலத்தினுடைய* ***ராஜஸாம்சாத் -*** *ராஜஸ அம்ஸத்திலிருந்து* ***உபஸ்த-இந்த்ரியம்*** – *ஜனன இந்திரியம்,* ***ஸம்பூதம்*** *– உண்டாயிற்று.*

*ஜலத்தினுடைய ராஜஸ அம்ஸத்திலிருந்து ஆண்-பெண் குறி என்ற ஸம்போகத்திற்கான ஜனன இந்திரியம் உண்டாயிற்று.*

------------------------------

**पृथिव्या राजसांशात् गुदेन्द्रियं सम्भूतम् ।**

***ப்ருதிவ்யா ராஜஸாம்சாத் குதேந்த்ரியம் ஸம்பூதம் |***

***ப்ருதிவ்யா:*** *– ப்ருதிவியினுடைய* ***ராஜஸாம்சாத் -*** *ராஜஸ அம்ஸத்திலிருந்து* ***குத-இந்த்ரியம்*** *– மலத்வாரம் என்ற இந்திரியம்,* ***ஸம்பூதம்*** *– உண்டாயிற்று.*

*ப்ருதிவியினுடைய (பூமியினுடைய) ராஜஸ அம்ஸத்திலிருந்து மலத்தை வெளியேற்றும் மலத்வாரம் என்றும் குதம் என்றும் சொல்லப்படும் இந்திரியம் உண்டாயிற்று.*

-----------------------

***<u>பஞ்ச ப்ராணன்களின் உத்பத்தி</u>***

**एतेषां समष्टिराजसांशात् पञ्चप्राणाः सम्भूताः ।**

***ஏதேஷாம் ஸமஷ்டி-ராஜஸாம்சாத் பஞ்சப்ராணா: ஸம்பூதா: |***

***ஏதேஷாம்*** *– இந்த ஐந்து தத்துவங்களின்* ***ஸமஷ்டி -*** *மொத்த-முழுமையான (total) தத்துவங்களின்* ***ராஜஸாம்சாத் -*** *ராஜஸ குணத்தின் அம்ஸத்திலிருந்து* ***பஞ்ச ப்ராணா:*** *– ஐந்து ப்ராணன்கள்* ***ஸம்பூதம்*** *– உண்டாயிற்று.*

*இந்த ஐந்து தத்துவங்களின் மொத்த-முழுமையான (total) தத்துவங்களின் ராஜஸ குணத்தின் அம்ஸத்திலிருந்து (ப்ராணன், அபானன், வ்யானன், உதானன், ஸமானன் என) ஐந்து ப்ராணன்கள் உண்டாயிற்று.*

*இவ்விதமாக,*

***பஞ்ச தந்மாத்திரைகள் (ஸூக்ஷ்ம பஞ்ச பூதங்கள்) – 5***
***புத்தி, மனம்,சித்தம், அஹங்காரம் என்ற அந்தக்ரணம் – 4***
***சக்ஷு :, ச்ரோத்ரம், த்வக், ரஸனா, க்ராணம் என ஞானேந்த்ரியங்கள் – 5***
***வாக், பாணி, பாதம், பாயு, உபஸ்தம் என கர்மேந்த்ரியங்கள் – 5***
***ப்ராணன், அபானன், வ்யானன், உதானன், ஸமானன் என ப்ராணன்கள் – 5***

*என மொத்தம் 24 தத்துவங்கள் மாயையின் ஸத்வ - ரஜஸ் என்ற குணங்களிலிருந்து தோன்றின.*
*இனி மாயையின் தாமஸ குணத்திலிருந்து ஸ்தூல பூதங்களின் ஸ்ருஷ்டி சொல்லப்படுகின்றது.*

-------------------

***ஸ்தூல பஞ்ச பூதங்களின் ஸ்ருஷ்டி***
***பஞ்சீக்ரணம் என்ற முறை***

**एतेषां पञ्चतत्त्वानां तामसांशात् पञ्चीकृतपञ्चतत्त्वानि भवन्ति ।**
***ஏதேஷாம் பஞ்ச-தத்த்வானாம் தாமஸாம்சாத் பஞ்சீக்ருத-பஞ்சதத்த்வானி பவந்தி /***

***ஏதேஷாம்*** *– இந்த* ***பஞ்ச-தத்த்வானாம் -*** *ஐந்து தத்துவங்களின்* ***தாமஸாம்சாத் -*** *தாமஸ குணத்தின் அம்ஸத்திலிருந்து* ***பஞ்சீக்ருத-பஞ்சதத்த்வானி*** *– பஞ்சீகரணம் செய்யப்பட்ட பஞ்ச தத்துவங்கள்* ***பவந்தி*** *– உண்டாயின.*

------------------------------

*இந்த ஐந்து (ஸூக்ஷ்மமான பஞ்ச தந்மாத்திரைகளின்) தத்துவங்களின் தாமஸ குணத்தின் அம்ஸத்திலிருந்து பஞ்சீகரணம் செய்யப்பட்ட (ஸ்தூலமான) பஞ்ச தத்துவங்கள் உண்டாயின.*

------------------------------

## पञ्चीकरणं- *பஞ்சீகரணம்*

**पञ्चीकरणं कथम् इति चेत् ।**

***பஞ்சீகரணம் கதம் இதி சேத் |***

***பஞ்சீகரணம்*** *- பஞ்சீகரணம்* ***கதம்*** *- எவ்விதம்* ***இதி சேத்*** *- என்று கேட்டால்?*

*பஞ்சீகரணம் எவ்விதம் செய்வது என்று கேட்டால்?*

**एतेषां पञ्चमहाभूतानां तामसांशस्वरूपम् एकमेकं भूतं द्विधा विभज्य एकमेकमर्धं पृथक् तूष्णीं व्यवस्थाप्य अपरमपरमर्धं चतुर्धा विभज्य स्वार्धमन्येषु अर्धेषु स्वभाग चतुष्टयसंयोजनंकार्यम् । तदा पञ्चीकरणं भवति ।**

***பஞ்சீகரணம் கதம் இதி சேத் | ஏதேஷாம் பஞ்சமஹா பூதானாம் தாமஸாம்ச ஸ்வரூபம் ஏகமேகம் பூதம் த்விதா விபஜ்ய ஏகமேகம்-அர்தம் ப்ருதக் தூஷ்ணீம் வ்யவஸ்தாப்ய அபரமபரமர்தம் சதுர்தா விபஜ்ய ஸ்வார்தமன்யேஷு அர்தேஷு ஸ்வபாக சதுஷ்டய ஸம்யோஜனம் கார்யம் | ததா பஞ்சீகரணம் பவந்தி |***

***ஏதேஷாம்*** *– இந்த* ***பஞ்சமஹாபூதானாம்*** *– பஞ்ச மஹா பூதங்களின்* ***தாமஸாம்ச*** *– தாமஸ குணத்தின் அம்ஸத்தை* ***ஸ்வரூபம்*** *– இயல்பாக கொண்டதை* ***ஏகமேகம் பூதம்*** *– ஒவ்வொரு பூதத்தையும்* ***த்விதா*** *- இரண்டாக* ***விபஜ்ய*** *– பிரித்து,* ***ஏகமேகம்-அர்தம்*** *– ஒவ்வொன்றின் பாதியையும்* ***ப்ருதக்*** *– தனியாக்கி,* ***தூஷ்ணீம்*** *– ஒன்றும் செய்யாமல்* ***வ்யவஸ்தாப்ய*** *- வைத்துக் கொண்டு,*

*இந்த பஞ்சமஹா பூதங்களின் தாமஸ குணத்தின் இயல்பை உடைய, ஒவ்வொரு பூதத்தையும் இரண்டாக பிரித்து, ஒவ்வொன்றின் பாதியையும் தனியாக்கி, ஒன்றும் செய்யாமல் வைத்துக் கொண்டு,*

***முதல் விபாகம் (பகுப்பு)***




-------------------------

***இரண்டாவது விபாகம் (பகுப்பு)***

***அபரம்-அபரம்-அர்தம்*** *– மற்ற –மற்றதின் பாதியை* ***சதுர்தா*** *- நான்காக* ***விபஜ்ய*** *– பிரித்து,*

*மற்ற –மற்ற பூதங்களின் பாதியை நான்காக பிரித்து,*

***ஸ்வார்தம்*** *– தன்னுடைய சொந்த பாகத்திற்கு* ***அன்யேஷு அர்தேஷு ஸ்வபாக சதுஷ்டய*** *– அந்நியமாக உள்ள பாதியில் தன்னுடைய பாகத்தின் நான்கில் ஒரு பகுதியை* ***ஸம்யோஜனம் -*** *சேர்த்தல் என்ற* ***கார்யம்*** *– செயலை செய்ய வேண்டும்.* ***ததா*** *– அப்பொழுது* ***பஞ்சீகரணம் -*** *பஞ்சீகரணம்* ***பவந்தி*** *– உண்டாகின்றது.*
*தன்னுடைய சொந்த பாகத்திற்கு அந்நியமாக உள்ள*

பாதியில் தன்னுடைய பாகத்தின் நான்கில் ஒரு பகுதியை சேர்த்தல் என்ற செயலை செய்ய வேண்டும். அப்பொழுது பஞ்சீகரணம் உண்டாகின்றது.




-------------------

<u>**பஞ்சீகரணம்**</u>

இந்த பஞ்சமஹா பூதங்களின் தாமஸ குணத்தின் அம்ஸ ஸ்வரூபம் எது உண்டோ, அந்த ஒவ்வொரு பூதத்தையும் இரண்டாக பிரித்து, ஒவ்வொன்றின் பாதியையும் தனியாக்கி, ஒன்றும் செய்யாமல் வைத்துக் கொண்டு, பூதங்களின் மற்ற – மற்ற பாதியை நான்காக பிரித்து, ஒவ்வொரு பாகத்தையும் ஒரு பூதத்தில் வரிசை க்ரமமாக நுழைக்க வேண்டும். அதனால், ஆகாசம் என்பது ஒரு பாகமாகவும், மற்ற நான்கு பாகங்களில் மற்ற நான்கு

*பூதங்கள் என்று ஆகாசம் ஐந்து பாகங்களாக ஆகும். அதுபோலவே, வாயு முதலியவற்றிலும் தன்னுடைய பாகத்தை வைத்துக் கொண்டு மீதம் உள்ள நான்கில் நான்கு பூதங்களை சேர்க்க வேண்டும். இதுவே பஞ்சீகரணம் என்று தத்துவத்தை அறிந்தவர்கள் கூறுகின்றார்கள். இவ்விதம் பஞ்சீகரணம் செய்யப்பட்ட பஞ்ச ஸ்தூல பூதங்களில் இருந்தே இந்த ஸ்தூலமான நாம் பார்க்கின்ற - வ்யவஹாரம் செய்கின்ற ப்ரஹ்மாண்டமானது உண்டாயிற்று.*

------------------------

***<u>ஸ்தூல சரீரத்தின் உத்பத்தி</u>***

**एतेभ्यः पञ्चीकृतपञ्चमहाभूतेभ्यः स्थूलशरीरं भवति ।**

***ஏதேப்ய: பஞ்சீக்ருத-பஞ்சமஹாபூதேப்ய: ஸ்தூலசரீரம் பவந்தி |***

***ஏதேப்ய:*** *- இந்த* ***பஞ்சீக்ருத-பஞ்சமஹாபூதேப்ய:-*** *பஞ்சீக்ருதம் செய்யப்பட்ட ஐந்து மஹா பூதங்களிலிருந்து* ***ஸ்தூலசரீரம்*** *– ஸ்தூல சரீரமானது (பரு உடல்)* ***பவந்தி*** *– உண்டாயிற்று.*

*இந்த பஞ்சீக்ருதம் செய்யப்பட்ட ஐந்து மஹா பூதங்களி லிருந்து ஸ்தூல சரீரமானது (பரு உடல்) உண்டாயிற்று.*

*பஞ்சீக்ருதம் செய்யப்பட்ட ஐந்து மஹா பூதங்களும் அதனுடைய காரியங்களாகிய ஸ்தூல ப்ரஹ்மாண்டம் அனைத்தும் விராட் என்று சொல்லப்படுகின்றது. இவ்வுலகில் இந்த நம்முடைய ஸ்தூல சரீரம் முதற் கொண்டு மலை, பூமி, புழு, பூச்சி, புல் என்று எதுவெல்லாம் ஸ்தூலமாக நம் புலன்களுக்கு புலப்படுகின்றதோ, அதுவெல்லாம் விராட் என்ற ஸமஷ்டி(total-cosmic)ஸ்தூல சரீரமே ஆகும். இதுவே ஈச்வரனுடைய ஸ்தூல சரீரமாகும். சுத்த நிர்குண ப்ரஹ்மத்திற்கு - ஈச்வரனுக்கு மாயையினால் விராட் என்ற(total-cosmic)ஸ்தூல சரீரமானது உண்டாகின் றது. வாஸ்தவத்தில் ப்ரஹ்மம் சரீரமற்றதே ஆகும்.*

*பஞ்சீகரணம் செய்யப்படாத பஞ்ச பூதங்களிலிருந்து 24 தத்துவங்கள் உண்டாயிற்று என்று முன்பு கூறப்பட்டது. அதுவே ஸமஷ்டியில்(total-cosmic)-ல் சொல்லும் போது ப்ரஹ்மத்தின் 'ஸூக்ஷ்ம தேஹம்' ஆகின்றது. அதற்கு ஹிரண்யகர்பர் என்று சாஸ்த்ரத்தில் பெயராகும். இதுவும் கூட மாயையினாலேயே உண்டாயிற்று. சுத்த ப்ரஹ்மத்திற்கு ஸூக்ஷ்ம தேஹமும் இல்லை.*

**एवं पिण्डब्रह्माण्डयोरैक्यं सम्भूतम् ।**

***ஏவம் பிண்டப்ரஹ்மாண்டயோரைக்யம் ஸம்பூதம் |***

***ஏவம்*** *– இவ்விதமாக* ***பிண்ட-ப்ரஹ்மாண்டயோரைக்யம்*** *– பிண்டம் மற்றும் ப்ரஹ்மாண்டங்களுக்கிடையில் ஐக்கிய மானது* ***ஸம்பூதம்****– உண்டாகின்றது.*

***ஸமஷ்டி*** *(total-cosmic)* ***ஸ்தூல தேஹமாகிய விராட்டில் நம் ஒவ்வொரு ஜீவர்களுடைய தனிப்பட்ட வ்யஷ்டி (indvitual) ஸ்தூல தேஹங்களும் அடங்கும்.***

***அதுபோலவே, ஸமஷ்டி*** *(total-cosmic)* ***ஸூக்ஷ்ம தேஹமாகிய ஹிரண்யகர்பரில் நம் ஒவ்வொரு ஜீவர்களுடைய தனிப்பட்ட வ்யஷ்டி (indvitual) ஸூக்ஷ்ம தேஹங்களும் அடங்கும்.***

***இங்கு, 'நான' என்று நாம் ஒவ்வொருவரும் அபிமானம் கொள்கின்ற இந்த தேஹத்தில் உள்ளவை-----***

***நான் + ஸூக்ஷ்ம தேஹம் + ஸூக்ஷ்ம தேஹம் = ஜீவன்***

***இதில் நம்முடைய ஸ்தூல மற்றும் ஸூக்ஷ்ம தேஹங்களைப் பற்றி நாம் பார்த்தோம். இனி, 'ஜீவாத்மா' மற்றும் 'நான்' என்ற ஆத்ம தத்துவத்தை பார்க்க வேண்டும்.***

***அதுபோலவே,***

| ***ஈச்வரன் + ஹிரண்யகர்பர் + விராட் = ப்ரஹ்மம்*** |
| --- |

***விராட் என்ற ஸமஷ்டி ஸ்தூல சரீரம் மற்றும் ஹிரண்யகர்பர் என்ற ஸமஷ்டி ஸூக்ஷ்ம தேஹத்தையும் பார்த்தோம். இனி, 'ப்ரஹ்மம்' மற்றும் 'ஈச்வரன்' என்ற தத்துவத்தையும் பார்க்க வேண்டும்.***

-------------------

***<u>ஜீவாத்மா</u>***

**स्थूलशरीराभिमानि जीवनामकं ब्रह्मप्रतिबिम्बं भवति । स एव जीवः प्रकृत्या स्वस्मात् ईश्वरं भिन्नत्वेन जानाति ।**

***ஸ்தூலசரீராபிமானி ஜீவ-நாமகம் ப்ரஹ்ம-ப்ரதிபிம்பம் பவதி / ஸ ஏவ ஜீவ: ப்ரக்ருத்யா ஸ்வஸ்மாத் ஈச்வரம் பின்னத்வேன ஜானாதி /***

***ஸ்தூலசரீராபிமானி*** *– ஸ்தூல சரீரத்தில் அபிமானத்தை உடையவனும்* ***ஜீவ-நாமகம்*** *– ஜீவன் என்ற பெயரை உடையவனுமாக இருப்பவன்* ***ப்ரஹ்ம-ப்ரதிபிம்பம்****– ப்ரஹ்மத்தின் ப்ரதிபிம்பம்* ***பவதி*** *– ஆவான்.* ***ஸ–ஏவ ஜீவ:*** *– அந்த ஜீவனே* ***ப்ரக்ருத்யா*** *– அக்ஞானத்தினால்* ***ஸ்வஸ்மாத்*** *– தன்னிடமிருந்து* ***ஈச்வரம்*** *– ஈச்வரனை* ***பின்னத்வேன*** *– வேறாக* ***ஜானாதி*** *– அறிகின்றான்.*

*ஸ்தூல சரீரத்தில் அபிமானத்தை உடையவனும், ஜீவன் என்ற பெயரை உடையவனுமாக இருப்பவன் ப்ரஹ்மத் தின் ப்ரதிபிம்பம் ஆவான். அந்த ஜீவனே அக்ஞானத்தினால் தன்னிடமிருந்து ஈச்வரனை வேறாக அறிகின்றான்.*

**अविद्योपाधिः सन् आत्मा जीव इत्युच्यते ।**

***அவித்யோபாதி: ஸன் ஆத்மா ஜீவ இத்யுச்யதே /***

***அவித்யோபாதி: ஸன்*** *– அவித்யா என்ற உபாதியை உடையவனாக இருக்கின்ற* ***ஆத்மா -*** *ஆத்மா* ***ஜீவ -*** *ஜீவன்* ***இத்யுச்யதே*** *– என்று சொல்லப்படுகின்றான்.*

*அவித்யா என்ற உபாதியை உடையவனாக இருக்கின்ற ஆத்மா ஜீவன் என்று சொல்லப்படுகின்றான்.*

---------------------

***<u>ஈச்வர தத்துவம்</u>***

**मायोपाधिः सन् आत्मा ईश्वर इत्युच्यते ।**

***மாயோபாதி: ஸன் ஆத்மா ஈச்வர இத்யுச்யதே /***

***மாயோபாதி: ஸன்*** – *அவித்யா என்ற உபாதியை உடைய வனாக இருக்கின்ற* ***ஆத்மா*** *- ஆத்மா* ***ஈச்வர:*** *- ஜீவன்* ***இத்யுச்யதே*** *- என்று சொல்லப்படுகின்றான்.*

*மாயா என்ற உபாதியை உடையவனாக இருக்கின்ற ஆத்மா ஈச்வரன் என்று சொல்லப்படுகின்றான்.*

*<u>உபாதி</u>* – ***'எது தன் அருகில் உள்ள வஸ்துவின் தன்மையை மறைத்து தன்னுடைய தன்மையை ஏற்றி வைக்கின்றதோ, அது உபாதியாகும்'.*** *எவ்வாறெனில், ஸ்படிக லிங்கத்தின் பின்னால் வைக்கப்பட்ட செம்பருத்தி பூவானது, தன்னுடைய சிவப்பு வர்ணத்தை ஸ்படிக லிங்கத்தில் ஏற்றி வைக்கின்றது. எனவே, ஸ்படிக லிங்கத்திற்கு செம்பருத்தி பூ உபாதியாகும்.*
*ஸ்படிகலிங்கம்* ***<u>உபஹிதம்</u>*** *என்று சொல்லப்படும். நான் என்ற ஆத்மாவை மறைத்திருக்கின்ற அவித்யாவே ஜீவாத்மாவிற்கு உபாதியாகும். அதனாலேயே ஜீவன் நான் என்ற சுத்த சைதன்யமான தன்னை ஸ்தூல-ஸூக்ஷ்ம தேஹங்களாக அபிமானத்தை அடைந்து ஸம்ஸாரி ஆகின்றான். அது போலவே மூன்று குணமுள்ள மாயாவே ஈச்வரனின் உபாதியாகும்.*

***ப்ரஹ்மம்+மாயா=ஈச்வரன்***
***ஆத்மா+அவித்யா=ஜீவன்***

---

**एवं उपाधिभेदात्जीवेश्वरभेददृष्टिः यावत्पर्यन्तं तिष्ठति तावत्पर्यन्तं जन्ममरणादिरूपसंसारो न निवर्तते ।**

***ஏவம் உபாதி-பேதாத்-ஜீவேச்வர-பேதத்ருஷ்டி: யாவத் பர்யந்தம் திஷ்டதி தாவத்-பர்யந்தம் ஜன்ம-மரணாதி ரூப-ஸம்ஸாரோ ந நிவர்ததே /***

***ஏவம்*** *– இவ்விதமாக* ***உபாதி-பேதாத்-ஜீவேச்வர-பேத த்ருஷ்டி:*** *- உபாதி பேதத்தினால் ஜீவ-ஈச்வர பேத த்ருஷ்டி (வேற்றுமை பார்வை)* ***யாவத்-பர்யந்தம்*** *– எதுவரையில்* ***திஷ்டதி****-இருக்கின்றதோ* ***தாவத்-பர்யந்தம்****-அது வரையில்* ***ஜன்ம-மரணாதிரூப-ஸம்ஸாரோ*** *– பிறப்பு-இறப்பு என்ற முதலான வடிவிலான ஸம்ஸாரமானது* ***ந நிவர்ததே*** *– நீங்குவதில்லை.*

*இவ்விதமாக உபாதி பேதத்தினால் ஜீவ-ஈச்வர பேத த்ருஷ்டி (வேற்றுமை பார்வை) எதுவரையில் இருக்கின்றதோ அதுவரையில் பிறப்பு-இறப்பு என்ற முதலான வடிவிலான ஸம்ஸாரமானது நீங்குவதில்லை.*

**तस्मात्कारणात् न जीवेश्वरयोर्भेदबुद्धिः स्वीकार्या ।**

***தஸ்மாத்-காரணாத் ந ஜீவேச்வரயோர்-பேதபுத்தி: ஸ்வீகார்யா /***

***தஸ்மாத்-காரணாத்*** *– அந்த காரணத்தால்* ***ஜீவேச்வரயோர் பேதபுத்தி:*** *– ஜீவ-ஈச்வரர்களிடத்தில் உண்டாகும் பேத அறிவானது* ***ந ஸ்வீகார்யா*** *–ஸ்வீகாரம் செய்யத்தக்கதல்ல.*

*அந்த காரணத்தால் ஜீவ-ஈச்வரர்களிடத்தில் உண்டாகும் பேத அறிவானது(புத்தியானது) ஸ்வீகாரம் செய்யத் தக்கதல்ல.*

---------------------

## “தத்த்வமஸி”(தத்-த்வம்-அஸி) மஹாவாக்ய விளக்கம்

*சாந்தோக்ய உபநிஷத்தில் சொல்லப்படுள்ள **“தத்-த்வம்-அஸி”- “நீ அதுவாக இருக்கிறாய்” -** என்ற மஹாவாக்கிய மானது ஜீவனும்-ஈச்வரனும் ஒருவரே என்று ஐக்கியத்தை உபதேசிக் கின்றது. எவ்விதமாக ஜீவனும் – ஈச்வரனும் ஒன்றாக இருக்க முடியும் என்று இங்கு விசாரம் செய்யப் படுகின்றது.*

**ननु साहंकारस्य किंचिज्ज्ञस्य जीवस्य निरहंकारस्य सर्वज्ञस्य ईश्वरस्य तत्त्वमसीति महावाक्यात् कथमभेदबुद्धिः विरुद्धधर्माक्रान्तत्त्वात् इति चेन्न ।**

***நநு ஸாஹங்காரஸ்ய கிம்சிஜ்ஞஸ்ய ஜீவஸ்ய நிரஹங்காரஸ்ய ஈச்வரஸ்ய தத்த்வமஸீதி மஹாவாக்யாத் கதமபேதபுத்தி: ஸ்யாத் / உபயோ: விருத்த-தர்மாக்ராந்தத்த்வாத் இதி சேன்ன /***

*__நநு__ – ஆனால், **ஸாஹங்காரஸ்ய** – அஹங்காரத்தோடு கூடி இருக்கின்ற **கிம்சிஜ்ஞஸ்ய**– அல்பமான அறிவை உடைய **ஜீவஸ்ய** – ஜீவனுக்கும் **நிரஹங்காரஸ்ய** – அஹங் காரம் இல்லாத **ஈச்வரஸ்ய -** ஈச்வரனுக்கும் **தத்த்வமஸீதி** – தத்-த்வம்-அஸி **மஹாவாக்யாத் -** மஹாவாக்கியத்தால் **கதம்-அபேத-புத்தி: -** எவ்விதமாக அபேத அறிவானது **ஸ்யாத்** – உண்டாகும்? **உபயோ: -** இரண்டிற்கும் **விருத்த-தர்ம-ஆக்ராந்தத்த்வாத்** – விரோதமான தர்மங்கள் காணப்படு வதால். **இதி சேத்-ந-** ஐக்கியம் செய்வது முடியாது எனில்),*

*ஆனால், அஹங்காரத்தோடு கூடியிருக்கின்ற அல்பமான அறிவை உடைய ஜீவனுக்கும், அஹங்காரமில்லாத ஈச்வரனுக்கும் தத்-த்வம்-அஸி மஹாவாக்கியத்தால் எவ் விதமாக அபேத அறிவானது உண்டாகும்? (ஏனெனில்) இரண்டிற்கும் விரோதமான தர்மங்கள் காணப்படுவ தால். (ஜீவ-ஈச்வரர்களை ஒன்று என்று) ஐக்கியம் செய்வது முடியாது எனில்,*

**स्थूलसूक्ष्मशरीराभिमानी त्वंपदवाच्यार्थः । उपाधिविनिर्मुक्तं समाधिदशासंपन्नं शुद्धं चैतन्यं त्वंपदलक्ष्यार्थः ।**

***ஸ்தூல-ஸூக்ஷ்ம-சரீராபிமானீ த்வம்பதவாச்யார்த்த: | உபாதி-விநிர்முக்தம் ஸமாதிதசா-ஸம்பன்னம் சுத்தம் சைதன்யம் த்வம்பத-லக்ஷ்யார்த்த: |***

***ஸ்தூல-ஸூக்ஷ்ம-சரீராபிமானீ-*** *ஸ்தூல-ஸூக்ஷ்ம சரீரங்களில் அபிமானத்தை உடையவன்* ***த்வம்பத-வாச்யார்த்த: -*** *த்வம்- என்ற பதத்தின் நேரடியான சொற்பொருளாகும்.* ***உபாதி*** *– உபாதிகள்* ***விநிர்முக்தம்*** *– நீங்கிய* ***ஸமாதிதசா-ஸம்பன்னம்*** *– ஸமாதி நிலையை அடைந்த* ***சுத்தம்*** *– சுத்தமான* ***சைதன்யம்*** *– சைதன்யம் (அறிவு-உணர்வு)* ***த்வம்பத -*** *த்வம் பதத்தின்* ***லக்ஷ்யார்த்த: -*** *லக்ஷியார்த்தமாகும்.*

*ஸ்தூல-ஸூக்ஷ்ம சரீரத்தில் அபிமானத்தை உடைய ஸம்ஸாரியாகிய ஜீவன் (தத்-த்வம்-அஸி மஹாவாக்கியத்திலுள்ள)* ***‘த்வம்’ (நீ)*** *- என்ற பதத்தின் நேரடியான சொற்பொருளாகும். உபாதிகள் நீங்கிய ஸமாதி நிலையை அடைந்த சுத்தமான சைதன்யம் (அறிவு-உணர்வு)* ***‘த்வம்’ (நீ)*** *-என்ற பதத்தின் லக்ஷியார்த்தமாகும் - உணர்த்த நினைக்கின்ற உள்ளுறை அர்த்தமாகும்.*

**एवं सर्वज्ञत्वादिविशिष्ट ईश्वरः तत्पदवाच्यार्थः ।**

***ஏவம் ஸர்வக்ஞத்வாதிவிசிஷ்ட ஈச்வர: தத்பத வாச்யார்த்த: |***

***ஏவம் -*** இவ்விதமாக ***ஸர்வக்ஞத்வாதிவிசிஷ்ட****-ஸர்வக்ஞ தன்மை முதலானவற்றோடு கூடிய* ***ஈச்வர:*** *- ஈச்வரன்* ***தத் பதவாச்யார்த்த:****-தத் என்ற பதத்தின் வாச்சியார்த்தமாகும்.*

*இவ்விதமாக ஸர்வக்ஞ தன்மை (அனைத்தையும் அறியும் தன்மை) முதலானவற்றோடு கூடிய ஈச்வரன் (தத்-த்வம்-அஸி மஹாவாக்கியத்திலுள்ள)* ***‘தத்’*** *(அது) என்ற பதத்தின் வாச்சியார்த்தமாகும்.*

उपाधिशून्यं शुद्धचैतन्यं तत्पदलक्ष्यार्थः ।

***உபாதிசூன்யம் சுத்தசைதன்யம் தத்பதலக்ஷ்யார்த்த: |***

***உபாதி*** *– உபாதிகள்* ***சுத்த சைதன்யம்*** *– சுத்தமான சைதன்யம் (அறிவு-உணர்வு)* ***தத்பத -*** *தத் பதத்தின்* ***லக்ஷ்யார்த்த: -*** *லக்ஷியார்த்தமாகும்.*

*உபாதிகள் நீங்கிய சுத்தமான சைதன்யம் (அறிவு-உணர்வு)* ***'தத்'*** *(அது) -என்ற பதத்தின் லக்ஷியார்த்தமாகும்- உணர்த்த நினைக்கின்ற உள்ளுறை அர்த்தமாகும்.*

एवं च जीवेश्वरयोः चैतन्यरूपेणाभेदे बाधकाभावः ।

***ஏவம் ச ஜீவேச்வரயோ: சைதன்யரூபேணாபேதே பாதகாபாவ: |***

***ஏவம் ச-*** *இவ்விதமாக* ***ஜீவேச்வரயோ:-*** *ஜீவ-ஈச்வரர் களுக்கு இடையில்* ***சைதன்ய-ரூபேண-அபேதே-*** *சைதன்ய வடிவத்தில் உள்ள பேதமற்ற தன்மையானது* ***பாதகாபாவ: -*** *மறுக்கக் கூடியதல்ல.*

*இவ்விதமாக ஜீவ-ஈச்வரர்களுக்கிடையில் சைதன்ய வடிவத்தில் உள்ள பேதமற்ற தன்மையானது மறுக்கக் கூடியதல்ல.*

-------------------

***ஜீவன்முக்தன்***

एवं च वेदान्तवाक्यैः सद्गुरूपदेशेन च सर्वेष्वपि भूतेषु येषां ब्रह्मबुद्धिरुत्पन्ना ते जीवन्मुक्ताः इत्यर्थः (भवन्ति) ।

***ஏவம் ச வேதாந்தவாக்யை: ஸத்குரூபதேசேன ச ஸர்வேஷ்வபி பூதேஷு யேஷாம் ப்ரஹ்ம-புத்திருத்பன்னா தே ஜீவன்முக்தா: இத்யர்த்தா: (பவந்தி) |***

***ஏவம் ச -*** *இவ்விதமாக* ***வேதாந்தவாக்யை: -*** *வேதாந்த (மஹா) வாக்கியங்களால்* ***ஸத்குரு-உபதேசேன ச*** *– ஸத் குருவின் உபதேசத்தால்* ***ஸர்வேஷ்வபி பூதேஷு–*** *அனைத்து உயிர்களிலும்* ***யேஷாம் -*** *எவர்களுக்கு* ***ப்ரஹ்ம-புத்திர்-உத்பன்னா*** *– ப்ரஹ்மம் என்ற அறிவானது*

*உண்டாகின்றதோ* ***தே ஜீவன்முக்தா:*** *- அவர்கள் ஜீவன் முக்தர்கள்* ***(பவந்தி) இத்யர்த்தா:*** *– ஆகின்றார்கள் என்று அர்த்தமாகும்.*

*இவ்விதமாக ஸத்குருவின் உபதேசத்தால், வேதாந்த வாக்கியங்கள் (‘****தத்வமஸி****’ என்ற முதலான உபநிஷத் மஹாவாக்கியங்கள்) மூலம், எவர்களுக்கு அனைத்து உயிர்களிலும் (அனைத்துமாக) இருப்பது ப்ரஹ்மமே என்ற அறிவானது உண்டாகின்றதோ அவர்கள்* ***ஜீவன் முக்தர்கள்*** *ஆகின்றார்கள் என்று அர்த்தமாகும்.*

**ननु जीवन्मुक्तः कः?**

***நநு ஜீவன்முக்த: க:?***

***நநு*** *- ஆனால்* ***ஜீவன்முக்த: க:?*** *– ஜீவன் முக்தன் என்பவர் யார்?*

***ஆனால் ஜீவன் முக்தன் என்பவர் யார்? (எனில்)***

**यथा देहोऽहं पुरुषोऽहं ब्राह्मणोऽहं शूद्रोऽहमस्मीति दृढनिश्चयः तथा नाहं ब्राह्मणो न शूद्रो न पुरुषः किन्तु असङ्गः सच्चिदानन्दस्वरूपः प्रकाशरूपः सर्वान्तर्यामी चिदाकाश रूपोस्मीति दृढनिश्चयरूपः अपरोक्षज्ञानवान् जीवन्मुक्तः ।**

***யதா தேஹோ(அ)ஹம் புருஷோ(அ)ஹம் ப்ராஹ்மணோ(அ)ஹம் சூத்ரோ(அ)ஹமஸ்மீதி த்ருட நிச்சய: ததா நாஹம் ப்ராஹ்மணோ ந சூத்ரோ ந புருஷ: கிந்து அஸங்க: ஸச்சிதாநந்தஸ்வரூப: ப்ரகாச ரூப: ஸர்வாந்தர்யாமீ சிதாகாச ரூபோஸ்மீதி த்ருட நிச்சய ரூப: அபரோக்ஷக்ஞானவான் ஜீவன்முக்த: |***

***யதா***-*எவ்விதமாக* ***தேஹோ(அ)ஹம்***-*நான் தேஹம்* ***புருஷோ (அ)ஹம்*** *– நான் மனிதன்* ***ப்ராஹ்மணோ(அ)ஹம்*** *-நான் ப்ராஹ்மணன்* ***சூத்ரோ(அ)ஹம்*** *– நான் சூத்திரனாக* ***அஸ்மி-இதி*** *– இருக்கிறேன் என்று* ***த்ருடநிச்சய:-*** *திடமான*

*நிச்சயமான எண்ணம் இருக்கின்றதோ* ***ததா -*** *அந்த விதமா கவே* ***நாஹம் ப்ராஹ்மணோ-****நான் ப்ராஹ்மணனில்லை* ***ந சூத்ரோ*** *– நான் சூத்திரனில்லை* ***ந புருஷ: -*** *நான் மனிதன் இல்லை* ***கிந்து*** *– ஆனால்* ***அஸங்க: -*** *எதிலும் பற்றாமல்* ***ஸச்சிதாநந்தஸ்வரூப:-****ஸத்-சித்-ஆனந்த வடிவாக* ***ப்ரகாச ரூப: -*** *ப்ரகாச வடிவாக* ***ஸர்வாந்தர்யாமீ*** *– எல்லாவற்றி லும் உள்ளுறைகின்றவனாக* ***சிதாகாச ரூபோ -*** *சித்-ஆகாச வடிவாக* ***அஸ்மீ-இதி****– இருக்கின்றேன் என்ற* ***த்ருடநிச்சய ரூப: -*** *திடமான நிச்சய வடிவான* ***அபரோக்ஷ க்ஞானவான்*** *– அனுபவமான ஞானத்தை உடையவன்* ***ஜீவன்முக்த: -*** *ஜீவன் முக்தன் ஆவான்.*

*எவ்விதமாக* ***'நான் தேஹம்' 'நான் மனிதன்' 'நான் ப்ராஹ்மணன்' 'நான் சூத்திரனாக இருக்கிறேன்'*** *என்று திடமான நிச்சயமான எண்ணம் இருக்கின்றதோ, அந்த விதமாகவே* ***'நான் ப்ராஹ்மணனில்லை' 'நான் சூத்திர னில்லை' 'நான் மனிதனில்லை'****. ஆனால்,* ***'எதிலும் பற்றா மல் ஸத்-சித்-ஆனந்த வடிவாக ப்ரகாச வடிவாக எல்லா வற்றிலும் உள்ளுறைகின்றவனாக சித்-ஆகாச வடிவாக இருக்கின்றேன்'*** *என்ற திடமான நிச்சயமான அனுபவ ஞானத்தை உடையவன்* ***'ஜீவன் முக்தன்'*** *ஆவான்.*

**ब्रह्मैवाहमस्मीत्यपरोक्षज्ञानेन निखिलकर्मबन्धविनिर्मुक्तः स्यात् ।**

***ப்ரஹ்மைவாஹமஸ்மீத்யபரோக்ஷஞானேன நிகில-கர்மபந்த-விநிர்முக்த: ஸ்யாத் |***

***ப்ரஹ்மைவாஹமஸ்மீத்யபரோக்ஷஞானேன-*** *'நான் ப்ரஹ் மமாகவே இருக்கின்றேன்' என்ற அபரோக்ஷமான (ஆத்மானுபவ வடிவான) ஞானத்தால்* ***நிகில-கர்மபந்த-விநிர்முக்த: -*** *அனைத்து கர்ம பந்தங்களிலிருந்தும் விடு பட்டவனாக* ***ஸ்யாத்*** *– ஆகின்றான்.*

*நான் ப்ரஹ்மமாகவே இருக்கின்றேன் என்ற அபரோக்ஷ மான (ஆத்மானுபவ வடிவான) ஞானத்தால் அனைத்து கர்ம பந்தங்களிலிருந்தும் விடுபட்டவனாக ஆகின்றான்.*

---------------------

## <u>*கர்மங்களின் விசாரம்*</u>

**कर्माणि कति विधानि सन्तीति चेत् आगामिसञ्चितप्रारब्ध भेदेन त्रिविधानि सन्ति।**

***கர்மாணி கதி விதானி ஸந்தீதி சேத் ஆகாமி-ஸஞ்சித-ப்ராரப்த பேதேன த்ரிவிதானி ஸந்தி /***

***கர்மாணி -*** *கர்மங்கள்* ***கதி விதானி*** *– எத்தனை விதங்கள்* ***ஸந்தீதி சேத்*** *– இருக்கின்றன என்றால்?,* ***ஆகாமி-ஸஞ்சித-ப்ராரப்த பேதேன*** *– ஆகாமி-ஸஞ்சிதம்-ப்ராரப்தம் என்ற பேதத்தோடு* ***த்ரிவிதானி ஸந்தி -*** *மூன்று விதங்களாக இருக்கின்றன.*

*கர்மங்கள் எத்தனை விதங்கள் இருக்கின்றன என்றால்?, ஆகாமி-ஸஞ்சிதம்-ப்ராரப்தம் என்ற பேதத்தோடு கர்மங்கள் மூன்று விதங்களாக இருக்கின்றன.*

## <u>*1.ஆகாமி கர்மம்*</u>

**ज्ञानोत्पत्त्यनन्तरं ज्ञानिदेहकृतं पुण्यपापरूपं कर्म यदस्ति तदागामीत्यभिधीयते।**

***ஞானோத்பத்த்யநந்தரம் ஞானிதேஹக்ருதம் புண்யபாப ரூபம் கர்ம யதஸ்தி ததாகாமீத்யபிதீயதே /***

***ஞானோத்பத்த்யநந்தரம்*** *– ஞானம் உத்பத்தி ஆன பிறகு* ***ஞானிதேஹ க்ருதம்*** *– ஞானியினுடைய தேஹத்தால் செய்யப்பட்ட* ***புண்யபாப ரூபம்*** *– புண்ணியம்-பாபம்* ***கர்ம*** *– என்ற கர்மங்கள்* ***யதஸ்தி*** *– எவை உண்டோ* ***தத்-ஆகாமி-இத்யபிதீயதே*** *– அவை ஆகாமி என்று சொல்லப் படுகின்றன.*

*ஞானம் உத்பத்தி ஆன பிறகு ஞானியினுடைய தேஹத்தால் செய்யப்பட்ட புண்ணியம்-பாபம் என்ற கர்மங்கள் எவை உண்டோ அவை ஆகாமி என்று சொல்லப்படுகின்றன.*
*(மேலே ஞானிக்கு சொல்லப்பட்டது. ஸாதாரண மனிதர் களுக்கு, இந்த ஜன்மத்தில் பிறந்தது முதல் இறக்கின்ற*

*வரை தேஹம்-மனம்-வாக் இவற்றால் செய்யப்படுகின்ற கர்மங்கள் எதிர்வரும் காலத்தில் பலனை தருவதாக ஆகின்றன. அவைகளே* ***ஆகாமி கர்மங்கள்*** *எனப்படுகின் றன.* ***'எதிர் வரும் ஜென்மங்களில் பலன் கொடுக்கப் போகின்றவை'*** *என்ற பொருளில் ஆகாமி என்ற சப்தம் சொல்லப்படுகின்றது. சில-பல கர்மங்கள் இந்த ஜென்மத் திலேயே பலன் கொடுக்கின்றன. சில-பல கர்மங்கள் அடுத்தடுத்த ஜன்மங்களில் பலன் கொடுக்கின்றவை களாக ஆகின்றன.)*

## <u>*2.ஸஞ்சிதம் கர்மம்*</u>

**सञ्चितं किम् ?**

***ஸஞ்சிதம் கிம்?***

***ஸஞ்சிதம்*** *– ஸஞ்சிதம் கர்மம்* ***கிம்?*** *– என்றால் என்ன?*

*ஸஞ்சிதம் கர்மம் என்றால் என்ன?*

**अनन्तकोटिजन्मनां बीजभूतं सत् यत्कर्मजातं पूर्वार्जितं तिष्ठति तत् सञ्चितं ज्ञेयम्।**

***அநந்தகோடிஜன்மநாம் பீஜபூதம் ஸத் யத்கர்மஜாதம் பூர்வார்ஜிதம் திஷ்டதி தத் ஸஞ்சிதம் ஞேயம் |***

***அநந்தகோடி-ஜன்மநாம்*** *– எண்ணிலடங்கா கோடி ஜன்மங்களில் செய்யப்பட்டு* ***பீஜபூதம் ஸத்*** *– விதை வடிவத்தில்* ***யத்-கர்மஜாதம்*** *– எந்த கர்ம கூட்டங்கள் உண்டானதாக* ***பூர்வார்ஜிதம்*** *– முன் ஜன்மங்களில் ஸம்பாதிக்கப்பட்டதாக* ***திஷ்டதி*** *– உள்ளதோ* ***தத்*** *– அது* ***ஸஞ்சிதம்*** *– ஸஞ்சிதம் கர்மம்* ***ஞேயம்*** *–என்று அறிய வேண்டும்.*

*எண்ணிலடங்கா கோடி ஜன்மங்களில் செய்யப்பட்டு விதை வடிவத்தில் எந்த கர்ம கூட்டங்கள் முன் ஜன்மங்களில் ஸம்பாதிக்கப் பட்டதாக உள்ளதோ அது ஸஞ்சிதம் கர்மம் என்று அறிய வேண்டும்.*

-----------------------------

***3.ப்ராரப்த கர்மம்***

**प्रारब्धं कर्म किमिति चेत् ।**

***ப்ராரப்தம் கர்ம கிமிதி சேத் |***

***ப்ராரப்தம் கர்ம** – ப்ராரப்த கர்மம் **கிமிதி சேத்** – எது என்று கேட்டால்?,*

*ப்ராரப்த கர்மம் எது என்று கேட்டால்?,*

**इदं शरीरमुत्पाद्य इह लोके एवं सुखदुःखादिप्रदं यत्कर्म तत्प्रारब्धम् । भोगेन एव नष्टं भवति । प्रारब्धकर्मणां भोगादेव क्षय इति ।**

***இதம் சரீரமுத்பாத்ய இஹ லோகே ஏவம் ஸுகது:க்காதி ப்ரதம் யத்கர்ம தத்ப்ராரப்தம் | போகேன ஏவ நஷ்டம் பவதி | ப்ராரப்தகர்மணாம் போகாதேவ க்ஷய இதி |***

***இதம்** - இந்த **சரீரமுத்பாத்ய** – சரீரத்தை உத்பத்தி செய்து **இஹ லோகே** – இந்த லோகத்தில் **ஏவம்** - இவ்விதமாக **ஸுகது:க்காதிப்ரதம்** – சுக-துக்கத்தை கொடுப்பதாக **யத்கர்ம** – எந்த கர்மம் இருக்கின்றதோ **தத்-ப்ராரப்தம்** – அது ப்ராரப்தம் | **போகேன ஏவ** - போகிப்பதாலேயே **நஷ்டம் பவதி** – நாசத்தை அடையும் | **ப்ராரப்த-கர்மணாம்** – ப்ராரப்த கர்மங்கள் **போகாதேவ** – அனுபவிப்பதால் மட்டுமே **க்ஷய இதி** – அழிந்து போகின்றன.*

*இந்த சரீரத்தை உத்பத்தி செய்து இந்த லோகத்தில் இவ்விதமாக சுக-துக்கத்தை கொடுப்பதாக எந்த கர்மம் இருக்கின்றதோ, அது ப்ராரப்தம் கர்மம் ஆகும். 'போகிப்பதாலேயே நாசத்தை அடையும்' என்று சாஸ்த்ரங்களில் சொல்லப்பட்டுள்ளதால், அந்த ப்ராரப்த கர்மங்கள் அனுபவித்து போகம் செய்வதால் மட்டுமே அழிந்து போகின்றன.*

**सञ्चितं कर्म ब्रह्मैवाहमस्मीति निश्चयात्मकज्ञानेन नश्यति ।**

***ஸஞ்சிதம் கர்ம ப்ரஹ்மைவாஹமஸ்மீதி நிச்சயாத்மக-ஞானேன நச்யதி |***

***ஸஞ்சிதம் கர்ம*** - *ஸஞ்சிதம் கர்மம்* ***ப்ரஹ்ம-ஏவ-அஹம்-அஸ்மி-இதி*** *-நான் ப்ரஹ்மமாகவே இருக்கின்றேன் என்ற* ***நிச்சயாத்மக-ஞானேன*** - *நிச்சயமான (அனுபவ) ஞானத்தால்* ***நச்யதி*** *– நாசத்தை அடைகின்றன.*

*ஸஞ்சிதம் கர்மமானது, 'நான் ப்ரஹ்மமாகவே இருக்கின்றேன்' - என்ற நிச்சயமான (அபரோக்ஷ ஞானம் என்ற அனுபவ) ஞானத்தால் நாசத்தை அடைகின்றன.*

**आगामि कर्म अपि ज्ञानेन नश्यति । किञ्च आगामि कर्मणां नलिनीदलगतजलवत्ज्ञानिनां सम्बन्धो नास्ति ।**

***ஆகாமி கர்ம அபி ஞானேன நச்யதி / கிஞ்ச ஆகாமி கர்மணாம் நலினீதலகதஜலவத்ஞானினாம் ஸம்பந்தோ நாஸ்தி /***

***ஆகாமி கர்ம அபி -*** *ஆகாமி கர்மங்களும் கூட* ***ஞானேன -*** *ஞானத்தால்* ***நச்யதி -*** *நாசத்தை அடைகின்றன.* ***கிஞ்ச -*** *மேலும்* ***ஆகாமி*** *– ஆகாமி* ***கர்மணாம்*** *– கர்மங்களுக்கும்* ***நலினீ-தலகத-ஜலவத்-ஞானினாம்*** *– ஞானிகளுக்கும் தாமரை இலை தண்ணீர் போன்று* ***ஸம்பந்தோ*** *– ஸம்பந்தமானது* ***நாஸ்தி*** *– இல்லை.*

*ஆகாமி கர்மங்களும் கூட ஞானத்தாலேயே நாசத்தை அடைகின்றன. மேலும் ஆகாமி கர்மங்களுக்கும் - ஞானிகளுக்கும் தாமரை இலை தண்ணீர் போன்று ஸம்பந்தமானது இல்லை.*

<u>***ஞானியின் கர்மம் என்னவாகும்?***</u>

***கிஞ்ச யே ஞானினாம் ஸ்துவந்தி பஜந்தி அர்சயந்தி தான் ப்ரதி ஞானிக்ருதம் ஆகாமிபுண்யம் கச்சதி /***

***கிஞ்ச -*** *மேலும்* ***யே -*** *எவர்கள்* ***ஞானினாம் -*** *ஞானிகளை*

***ஸ்துவந்தி*** *- ஸ்துதிக்கின்றார்களோ* ***பஜந்தி*** *– பூஜிக்கின்றார் களோ* ***அர்சயந்தி*** *– அர்சனை செய்கின்றார்களோ* ***தான்-ப்ரதி*** *- அவர்களை* ***ஞானிக்ருதம்*** *– ஞானியால் செய்யப் பட்ட* ***ஆகாமி-புண்யம்*** *- ஆகாமி புண்ணிய கர்மம்* ***கச்சதி*** *– செல்கின்றது.*

*மேலும் எவர்கள் ஞானிகளை ஸ்துதிக்கின்றார்களோ, பூஜிக்கின்றார்களோ, அர்சனை செய்கின்றார்களோ அவர்களை ஞானியால் செய்யப்பட்ட ஆகாமி புண்ணிய கர்மங்கள் செல்கின்றது.*

**ये ज्ञानिनं निन्दन्ति द्विषन्ति दुःखप्रदानं कुर्वन्ति तान्प्रति ज्ञानिकृतं सर्वमागामि क्रियमाणं यदवाच्यं कर्मपापात्मकं तद्गच्छति।**

***யே ஞானினாம் நிந்தந்தி த்விஷந்தி து:க்கப்ரதானம் குர்வந்தி தான்ப்ரதி ஞானிக்ருதம் ஸர்வமாகாமி க்ரியமாணம் யதவாச்யம் கர்மபாபாத்மகம் தத்கச்சதி /***

***யே*** *- எவர்கள்* ***ஞானினாம்*** *- ஞானிகளை* ***நிந்தந்தி*** *- நிந்திக்கின்றார்களோ* ***த்விஷந்தி*** *- த்வேசிக்கின்றார்களோ* ***து:க்கப்ரதானம் குர்வந்தி*** *– துக்கத்தை தருகின்றார்களோ* ***தான்-ப்ரதி*** *- அவர்களுக்கு* ***ஞானிக்ருதம்*** *- ஞானியினால் செய்யப்பட்ட* ***ஸர்வம்-க்ரியமாணம் ஆகாமி*** *– செய்யப் படுகின்ற அனைத்து ஆகாமி* ***யத்-அவாச்யம் கர்ம*** *– எந்த புகழ தகாத கர்மங்கள் உண்டோ,* ***பாபாத்மகம்*** *- மற்றும் பாப கர்மங்கள் உண்டோ* ***தத்-கச்சதி***-*அவை செல்கின்றது.*

*எவர்கள் ஞானிகளை நிந்திக்கின்றார்களோ, த்வேசிக்கின் றார்களோ, துக்கத்தை தருகின்றார்களோ அவர்களுக்கு, ஞானியினால் செய்யப்பட்ட செய்யப்படுகின்ற அனைத்து ஆகாமி கர்மங்கள் மற்றும் எந்த புகழத்தகாத கர்மங்கள் உண்டோ, மற்றும் பாப கர்மங்கள் உண்டோ அவை செல்கின்றது.*

**तथा चात्मवित्संसारं तीर्त्वा ब्रह्मानन्दमिहैव प्राप्नोति।**

***ததா சாத்மவித்ஸம்ஸாரம் தீர்த்வா ப்ரஹ்மாநந்தமிஹைவ ப்ராப்னோதி /***

***ததா*** – அவ்விதமாக ***ச-ஆத்மவித்*** – ஆத்மாவை (அபரோக்ஷமாக) அறிந்தவன் ***ஸம்ஸாரம்*** – ஸம்ஸாரத்தை ***தீர்த்வா*** – கடந்து ***ப்ரஹ்மாநந்தம் -*** ப்ரஹ்மானந்தத்தை ***இஹ-ஏவ*** – இங்கேயே ***ப்ராப்னோதி*** – அடைகின்றான்.

*அவ்விதமாக ஆத்மாவை (அபரோக்ஷமாக) அறிந்தவன் ஸம்ஸாரத்தை கடந்து ப்ரஹ்மானந்தத்தை இங்கேயே அடைகின்றான்.*

**तरति शोकमात्मवित इति श्रुतेः ।**

***தரதி சோகமாத்மவித இதி ச்ருதே: |***

***ஆத்மவித்*** – ஆத்மாவை அறிந்தவன் ***சோகம் -*** சோகத்தை ***தரதி -*** கடக்கின்றான் ***இதி ச்ருதே: -*** என்று ச்ருதியானது கூறுகின்றது.

*'ஆத்மாவை அறிந்தவன் சோகத்தை (ஸம்ஸாரத்தை) கடக்கின்றான்' - என்று ச்ருதியானது (சாந்தோக்ய உபநிஷத்) கூறுகின்றது.*

**तनुं त्यजतु वा काश्यां श्वपचस्य गृहेऽथ वा । ज्ञानसंप्राप्तिसमये मुक्तोऽसौ विगताशयः इतिस्मृतेश्च ।**

***தநும் த்யஜது வா காச்யாம் ஸ்வபசஸ்ய க்ருஹே(அ)த வா | ஞான ஸம்ப்ராப்திஸமயே முக்தோ(அ)ஸௌ விகதாசய: இதிஸ்ம்ருதேஸ்ச |***

***தநும்*** – உடலை ***காச்யாம்*** – காசியில் ***த்யஜது வா*** – விட்டால் என்ன? ***ஸ்வபசஸ்ய க்ருஹே அதவா*** – அல்லது நாயை சமைத்துண்ணும் சாண்டாலன் வீட்டில் விட்டால் என்ன? ***ஞானஸம்ப்ராப்தி-ஸமயே*** – ஞானத்தை அடைந்த பொழுதே ***-அஸௌ*** – அவன் ***விகதாசய: முக்தோ*** – ஆசைகள் ஏதுமற்றவனாக - கர்ம பலன்கள் இல்லாதவனாக முக்தனாக ஆகின்றான் ***இதி -*** என்று ***ஸ்ம்ருதேஸ்ச -*** ஸ்ம்ருதியும் கூறுகின்றது.

*ஞானி புருஷன் உடலை காசியில் விட்டால் என்ன? அல்லது நாயை சமைத்துண்ணும் சாண்டாலன் வீட்டில்*

*விட்டால் என்ன? ஞானத்தை அடைந்த பொழுதே அவன் ஆசைகள் ஏதுமற்றவனாக - கர்ம பலன்கள் இல்லாதவனாக முக்தனாக ஆகின்றான் – என்று ஸ்ம்ருதியும் கூறுகின்றது.*

**इति तत्वबोधप्रकरणं समाप्तम् ।**

***இதி தத்த்வபோதப்ரகரணம் ஸமாப்தம்***

***இதி -*** *இவ்விதம்* ***தத்த்வபோத*** *– தத்த்வ போதம்* ***ப்ரகரணம்*** *– நூல்* ***ஸமாப்தம்*** *– பூர்த்தியாயிற்று.*

*இவ்விதம் தத்த்வ போதம் என்ற நூல் பூர்த்தியாயிற்று.*
***ஸ்ரீ ஆதி சங்கராச்சார்யர் எழுதிய தத்த்வபோதம்***
***முற்றுபெற்றது***
***॥ ஓம் தத் ஸத் ॥***



************